# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 30th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*Cauvery-Mettur Project Canal.*

* 30 *S. N. Q.*—SRI P. U. SHANMUGAM (on behalf of Sri **K. Anbazhagan**) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா —

(அ) தஞ்சை மாவட்டம், பேராவூரணியை அடுத்த செல்லத்தூர் வெட்டிக்காடு என்னுமிடத்தில் சி.எம்.பி. பெரிய கால்வாயில் ஏற்பட்ட உடைப்பை அடைக்க எவ்வளவு நாட்கள் கழிந்தன ? அவ்வளவு நாட்கள் கழியக் காரணமென்ன ?

(ஆ) அதே இடத்தில் அல்லது அதற்குப் பக்கத்தில் கடந்த ஜூலை மாதத்தில் உடைப்பு ஏற்பட்டது உண்மையா ?

(இ) இந்தக் கால்வாயில் ஆண்டு தோறும், தண்ணீர் வருகின்ற பருவத்தில், உடைப்பு ஏற்படுவதும் உழவர் குடி மக்கள் பெரிதும் பாதிக்கப்படுவதும் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டுள்ளதா ?

(ஈ) இந்த உடைப்புக்களால், தண்ணீர் இன்றி வாடிப் பாழாகிவிட்ட பயிருக்கு உரியவர்கட்கும், பாதிக்கப்பட்ட விவசாயிகட்கும், அரசாங்கம் வரி நீக்குவதற்கான உத்தேசமுண்டா ?

**THE HON. SRI P. KAKKAN** : (அ) உடைப்பை அடைக்க எட்டு நாட்கள் ஆயின. அந்த வட்டாரத்தில் அதிக மும்மரமாக விவசாயம் நடந்துகொண்டிருந்ததால் வேலையாட்கள் அகப்படவில்லை. என்றாலும் உடைப்பை அடைக்கும் வேலை அதி துரிதமாகச் செய்து முடிக்கப்பட்டது.

(ஆ) 26—7—58-ல் கிராண்டு அணைக்கட்டு கால்வாயில் ஆர்.டி.10102 என்னுமிடத்தில் ஒரு உடைப்பு ஏற்பட்டது.

(இ) இந்த விஷயத்தைப்பற்றிப் பரிசீலனை செய்யப்படும்.

(ஈ) இந்த விஷயத்தையும் பற்றிப் பரிசீலனை செய்யப்படும்.

**SRI P. U. SHANMUGAM** : ஆண்டுதோறும் இதுபோல் உடைப்பு ஏற்படுவதைத் தடுக்க சர்க்கார் ஏதேனும் திட்டம் தீட்டியிருக்கிறார்களா ?

**THE HON. SRI P. KAKKAN** : இப்பொழுது தகவல் என்னிடம் இல்லை. இருந்தாலும், அந்த இடத்தில் நன்றாக அணை கட்டவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன்.

**SRI A. R. SUBBIAH MUDALIAR** : உடைப்பை அடைத்து முழு சப்ளை கொடுக்கப்பட்டுவிட்டதா ?

**THE HON. SRI P. KAKKAN** : ஆம்.

[30th September 1958

*Lower Bhavani Dam*

*31 *S.N.Q.*—SRI K. R. NALLASIVAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether water from the Lower Bhavani Dam was let into the Arakkankottai and Thadappalli canals in the Coimbatore district for second crop cultivation ; and

(*b*) whether any representation has been received by the Government protesting against this?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir.

SRI K. R. NALLASIVAM : கீழ்ப் பவானி அணைக்கட்டிலிருந்து இப்பொழுது கட்டப்பட்டிருக்கும் வாய்க்காலில் இரண்டு மூன்று ஆண்டுகளில் எவ்வளவு தண்ணீர் வந்துகொண்டிருந்ததோ அதில் மூன்றிலொரு பங்கு தண்ணீர்கூட அனேகமாகப் பாய்வது கிடையாது. அப்படியிருக்க ஒரு போகத்திற்கு ஏற்கெனவே தண்ணீர் வசதியுள்ள இடங்களுக்கும் இதிலிருந்து மேலும் தண்ணீர் விடுவது நியாயமா ?

THE HON. SRI P. KAKKAN : கீழ் பவானி அணை கட்டுவதற்கு முன்பே ஏற்கெனவே காளிங்கராயன், தோட்டப்பள்ளி, அரக்கன்கோட்டை வாய்க்கால்களிலும் தண்ணீர் பாய்ந்துகொண்டிருந்தது. அதையெல்லாம் பரிசீலனை செய்த இன்ஜினீர், ஏற்கெனவே, அணை கட்டுவதற்கு முன்பாக தண்ணீர் பாய்ந்த இடங்களுக்கு இரண்டு போகத்திற்குத் தண்ணீர் கொடுத்துப் பார்க்கலாம் என்று சொன்னதன் பேரில், கண்டிஷன்கள் போட்டுத்தான் கொடுத்திருக்கிறோம். கண்டிஷன்களாவன :

The Government did not guarantee supply to these land for the second crop cultivation. During the scarity period water will be suppiled for the second crop only after meeting the demands of the legitimate ayacuts under the Lower Bhavani Project.

SRI V. S. MANICKASUNDARAM : அரக்கன்கோட்டை வாய்க்காலுக்கும், தோட்டப்பள்ளி வாய்க்காலுக்கும் 15 வருஷ காலமாக இரண்டாம் போகத்திற்குத் தண்ணீர் வேண்டுமென்று கேட்டிருந்தும்கூட, கீழ் பவானித் திட்டம் பூர்த்தியாவதற்கு முன்னாலேயே ஆற்றில் தண்ணீர் இல்லை என்றதனால் தண்ணீர் மறுக்கப்பட்டு, இப்பொழுது கீழ் பவானி பிரதேசம் பூராவும் தண்ணீர் பாய்ந்து வருகிறது என்ற காரணத்தாலும், இருந்தும்கூட, அணையிலே தண்ணீர் மிச்சம் இருக்கிறது என்ற ஒரு விஷயத்தை அடிப்படையாகக் கொண்டுதான் இந்தத் தீர்மானத்திற்கு அரசாங்கம் வந்தது என்பது உண்மையா ? அம்மாதிரி கீழ்பவானிப் பிரதேசம் பூராவும் தண்ணீர் இப்போது பாய்வதில்லை என்பதும், பாயாமலிருந்தும் வரி வசூல் செய்கிறார்கள் என்பதும் உண்மையா ?

THE HON. SRI P. KAKKAN : தண்ணீர் அதிகமாக இருக்கிறதைப் பார்த்துத்தான் பிரதம இன்ஜீனீர் அவர்களும் அதற்கு மேல் ரெவினியூ போர்டார்களும் யோசித்து ஒரு கண்டிஷன் மூலம் கொடுக்க உத்தரவு கொடுத்திருக்கிறோம். உண்மையிலேயே 'டெயில்' எண்டுக்கு தண்ணீர் பாய்வதைக் கூடியவரை பாதிக்காதபடி எவ்வளவு தூரம் அரசாங்கம் செய்ய முடியுமோ அதைச் செய்யும்.

SRI N. K. PALANISAMI : நஞ்சைப் பிரதேசங்களுக்கு தண்ணீர் கொடுக்கப்படுகின்றதா ? புஞ்சைப் பிரதேசங்களுக்குத் தண்ணீர் கொடுக்கப்படுகின்றதா ? நஞ்சைப் பிரதேசங்களுக்கும் தண்ணீர் கொடுக்கப்படுகிறதென்றால், அதேமுறையில் பாக்கியிருக்கும் இடங்களுக்கும், லோயர் பவானி பிரதேசத்தில் இருக்கும் இடங்களுக்கும் இதே சலுகை கொடுக்கப்படுமா ?

30th September 1958]

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போடவேண்டும்.

SRI K. R. NALLASIVAM : கடந்த வருஷத்தில் ஒரு லட்சம் 95 ஆயிரம் எக்கருக்கு, கீழ் பவானிப் பிரதேசத்தில், தண்ணீர் விடுவதாக சர்க்கார் அறிவித்திருந்தும், அந்த ஒரு லட்சத்து 95 ஆயிரம் எக்கருக்கும் வரி வசூல் செய்திருந்தும், ஒரு லட்சம் 30 ஆயிரம் எக்கர் நிலத்திற்குத் தான் தண்ணீர் கொடுத்ததாக பிரதம இன்ஜினீர் அவர்களே ஒத்துக் கொண்டார்கள். அங்குள்ள மக்களும் இந்த வருஷம் முழு ஆயக் கட்டுக்கும் தண்ணீர் விடப்படவில்லை என்று புகார் செய்ய ஆரம்பித் திருக்கிறார்கள். அப்படித் தண்ணீர் பற்றாக்குறை இருக்கும்போது, எப்படி அரக்கன்கோட்டைக்கும் தோட்டப்பள்ளிக்கும் தண்ணீர் கொடுக்கலாம் ? இந்த வருஷத்தில் தண்ணீர்த் தட்டு இருப்பதால், அடுத்த வருஷத்திலாவது சோதனை செய்துகொள்ளலாம் என்று சர்க்கார் நினைப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் பூரணமாக கவனிக்கலாம்.

*Sales tax*

* 32 *S.N.Q.*—SRI T. SAMPATH (on behalf of Sri R. Srinivasa Iyer) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether a copy of the instructions issued with reference to the assurance given on the floor of the Assembly on 15th November 1957 during discussions on the Madras General Sales Tax Amendment Bill No. 23 of 1957 to the effect that the Government would be issuing executive instructions so that if a dealer proved to the satisfaction of the authorities that the sales tax on the sale of mill cloth had not been collected by him then the levy will not be made on such dealers, will be placed on the table of the House for information?

THE HON. SRI C. SUBRAMANIAM : A copy * of the executive instructions issued by the Government in the matter is placed on the table of the House.

SRI T. SAMPATH : Am I to understand from the answers placed on the table of the House that wherever the dealers have not collected the taxes during the period in question, the Government will not collect the tax and wherever they have collected, the Government would recover the tax?

THE HON. SRI C. SUBRAMANIAM : The instructions issued are quite explicit and it needs no further clarification at all.

SRI K. VINAYAKAM : Sir, may I know whether this kind of concession is applicable only to dealers in mill cloth who have not collected the tax? There are other dealers dealing in small parts, iron tools manufactured in lathes who have not collected the tax under instruction from the department but later they were made to pay at the rate of 9 pies in the rupee. Will the Government show the same concession as was extended to the cloth dealers to these dealers also?

---

* Printed as Appendix I on page 1124 infra.

[30th September 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : I am not aware of these things. A separate question may be put.

*Sea erosion*

MR. SPEAKER : The hon. Member Sri Daniel is not in his place. The question and answer will be printed in the proceedings.

* 33 *S.N.Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) how many houses were damaged on account of sea erosion at Colachel in Kanyakumari district which occurred in August, 1958;

(*b*) what is the estimated amount of damage caused; and

(*c*) what is the nature of relief given to the aggrieved by the Government?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) There were heavy rains on 18th August 1958 and the sea in Colachel grew rough and threatening to cause an erosion. The situation was grave for two days after which the sea calmed down. The number of huts damaged are as follows :—

| | Number of kadjan leaf-huts completely damaged. | Number of kadjan leaf huts partly damaged. |
|---|---|---|
| (1) Colachel village-Colachel area. | 1 | 11 |
| Kottilpad area .. .. | 1 | 2 |
| (2) Kadiapattanam-Muttam area. | 1 | .. |
| Total .. | 3 | 13 |

(*b*)—

| | Rs. |
|---|---|
| (i) Damage in Colachel .. .. .. | 145 |
| (ii) Damage in Kadiapattanam .. .. | 150 |
| (iii) Cost of country boat damaged .. .. | 300 |
| Total .. | 595 * |

(*c*) A cash grant of Rs. 200 was sanctioned to the persons whose houses were affected and for the persons who lost their nets. Further immediate relief is also being arranged by the Collector to those affected on verification by the Tahsildar.

---

* This does not include the cost of a pablo boat which was also smashed, but of which the engine was saved. Nor does it include the cost of the nets lost by two persons.

30th September 1958]

*Lower Bhavani ayacutdars*

* 34 *S.N.Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have given instructions to the Revenue Officials in Coimbatore district to stay the collections of penalties imposed on the Lower Bhavani ayacutdars; and

(*b*) the steps taken by the officials to investigate into the grievances of the ryots in the area referred to in clause (*a*)?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Remission of penalties in deserving cases is granted by the Special Deputy Tahsildars themselves and stay of collection of penalty is granted liberally by the Revenue Divisional Officers on appeals.

Sri N. K. PALANISAMI : கசிவு உள்ள இடங்களில் நெல் வைத்ததன் காரணமாக கசிவு இல்லாத இடங்களிலும் நெல் வைத்திருப்பதாகக் கருதி தண்ட வரி போடுவதால் விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். கசிவா, கசிவு இல்லையா என்று பார்த்து, கசிவு உள்ள இடங்களில் வரி ரெமிஷன் பண்ணுவதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அம்மாதிரி நீர்க்கசிவு இருந்தால் தண்ட வரி எடுத்துவிடுகிறார்கள்.

*National Extension Service Block in Paramakudi*

* 631*Q.*—Sri M. JAGANNATHAN (on behalf of Sri K. Ramachandran) : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the total amount spent up to 31st March 1958, in Paramakudi in the National Extension Service Block in Ramanathapuram district; and

(*b*) the details of the works executed up to 31st March 1958?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) A sum of Rs. 84,142 (including loan and non-loan expenditure) has been spent in Paramakudi Block up to 31st March 1958.

(*b*) Platforms to drinking water wells at Nariyila, Pamboor, Keelaparthibanur, Pulikulam and Marichikatti were constructed. The Manjalpattinam and Pamboor approach roads were gravelled.

*Poormen depots*

* 632 *Q.*—Sri N. R. THIAGARAJAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) what happened to the money collected from the public by Collectors and Tahsildars during 1946–47 to open 'Poormen Depots' for the benefit of poorer sections of the people after the closure of these depots;

(*b*) with whom the money so collected at Uthamapalayam, Madurai district, in respect of 'poormen depots' was deposited; and

[30th September 1958

(*c*) the steps taken by the Government to collect the money thus deposited?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Funds for opening Poormen depots were collected by non-official committees of local people. No money was collected from the public by Collectors or Tahsildars to open poormen depots, *except in* Coimbatore district where in one taluk, viz., Dharapuram, the Tahsildar had raised public contribution for the purpose, out of which a balance of Rs. 106·81 nP., is still available with interest.

(*b*) The balance amount of Rs. 3,007–8–2 with interest of Rs. 28 was drawn from the Urban Bank, Uthamapalayam, and was handed over to Sri S. Thiagaraja Mudaliar, one of the members of the Committee for utilizing it for a building of the Board High School, Uthamapalayam, as per resolution, dated 29th June 1947, of the Committee.

(*c*) Does not arise in view of the answer to (*b*) above.

SRI N. R. THIAGARAJAN : நான் ஜில்லா போர்டு தலைவராக இருந்தபோது, போர்டு ஹைஸ்கூல் கட்டிடம் கட்டுவதற்காக அந்தப் பணத்தைக் கொடுக்கும்படி அவர்களைக் கேட்டதற்கு, அத்தகைய பணம் தங்களிடம் இல்லை என்று அவர்கள் கூறிவிட்டார்கள். அதற்கு முன்பே பல முறை பொதுமக்கள் கேட்டும், பணத்தைச் சரியான முறையில் உபயோகம் செய்யவில்லை. போர்டு ஹைஸ்கூலுக்கென சேர்கிய நிதியை ஜில்லா போர்டு வசம் ஒப்படைத்துவிட வேண்டும் என்று சர்க்கார் உத்தரவிடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்கூல் விவகாரத்தைப் பற்றித் தனியாக கனம் கல்வி அமைச்சருக்கு கேள்வி போட்டால் அதற்கு அவர் பதிலளிக்கலாம்.

*Villages without Schools in Coimbatore District.*

9–10 a.m. * 633 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லாவிலே பள்ளிக்கூடங்கள் இல்லாத கிராமங்கள் எத்தனை ?

(ஆ) இக் கிராமங்களிலே கல்வி கற்கத் தகுந்த வயதடைந்தவர்களின் எண்ணிக்கை எத்தனை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) There is no village in Coimbatore District with a population of 500 and above in which there is no school.

(*b*) Does not arise.

SRI P. G. MANICKAM : அநேகமாக, 500-க்குள் குறைவான ஜனத்தொகையுள்ள கிராமங்களில்தான் பள்ளிக்கூடங்கள் அமைக்கப் படவில்லை. அந்த கிராமங்களிலுள்ள குழந்தைகளுக்குக் கல்வி போதிக்க சர்க்கார் என்ன நடவடிக்கை எடுக்கும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒவ்வொரு சிறிய ஊரிலும் பள்ளிக்கூடம் அமைத்தால், அவைகளுக்கு அங்காங்கே போதிய மாணவர்கள் இருக்கமாட்டார்கள். பெரிய கிராமங்களில் பள்ளிக்கூடங்களை அமைத்தால், அவைகளுக்குப் பக்கத்திலுள்ள கிராமங்களிலுள்ள பிள்ளைகளும் அந்தப் பள்ளிக்கூடங்களுக்குப் போகமுடியும். எனவே பெரிய கிராமங்களில் பள்ளிக்கூடங்களை அமைக்கவேண்டுமென்று சர்க்கார்

30th September 1958]

அபிப்பிராயப்படுகிறது. அவ்வாறே பெரிய கிராமங்களில் பள்ளிக்கூடங்களை சர்க்கார் அமைத்து வருகிறது. அவ்வாறு அமைக்கும்போது, சிறு குழந்தைகள் அவர்களுடைய வீடுகளிலிருந்து பள்ளிக்கூடங்களுக்குப் போகும்போது நடக்கவேண்டிய தூரம் ஒரு மைலுக்கு மேற்படாமல் இருக்கும் முறையில் அவைகளை அமைப்பதற்குச் சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறது.

*Primary Health Centres.*

* 634 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1957–58-ல் தஞ்சை ஜில்லாவில், தாலுகாவாரியாக, திறக்கப்பட்ட ஆரம்ப சுகாதார நிலயங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : A paper [a] is placed on the table of the House.

SRI M. C. MUTHUKUMARASWAMY : இந்தப் பதிலைப் பார்க்கும் போது, ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் அதிகமாக இல்லை என்று தெரிகிறது. அது ஒரு புறமிருக்க, ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களில் வேலை பார்க்கும் ஹெல்த் இன்ஸ்பெக்டர்கள் ஒரு இலாகாவைச் சேர்ந்தவர்களாகவும், டாக்டர்கள் வேறொரு இலாகாவைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கிறார்கள் ; இதன் காரணமாக, அந்த நிலயங்கள் சம்பந்தமாக ஏதாவது குறைகூறப்படும்போது இரு உத்தியோகஸ்தர்களும் ஒருவரையொருவர் குற்றம் சாட்டுகிறார்கள். எனவே, இந்த இரு இலாகாக்களையும் ஒரே இலாகாவின் கீழ் கொண்டுவர சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களில் ஒரு திட்டப்படி வேலை நடக்கிறது. எதை மாற்ற வேண்டுமென்று கனம் அங்கத்தினர் கூறுகிறார் என்று எனக்கு இன்னும் சரியாக விளங்கவில்லை. ஆகையால் கனம் அங்கத்தினர் தாம் கூறுவதை எனக்கு எழுதி அனுப்பினால், கவனிக்கிறேன்.

*Irrigation tanks*

* 635 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state with reference to the answer given to the starred question No. 268, on 10th March 1958 the nature of further action taken in the matter of providing irrigation tanks for the villages of Kanthadu and Kottikuppam in the Tindivanam taluk, South Arcot district?

THE HON. SRI P. KAKKAN : The Executive Engineer, South Arcot Division, has sent two estimates to the Collector of South Arcot district for his concurrence regarding the food value and the additional revenue for the formation of two tanks in Kottikuppam village and one tank in Kanthadu village. The Collector has referred the matter to the Assistant Collector, Tindivanam. The Collector is awaiting the report from the Assistant Collector for according his concurrence.

SRI M. JAGANNATHAN : கொட்டிக்குப்பம், காந்தடு கிராமங்களில் நீர்ப்பாசன வசதி அளிக்கக்கூடிய ஏரிகள் இல்லாததால் அங்குள்ள விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அங்கே ஏரிகளை அமைக்கும் வேலைகளை துரிதமாகச் செய்வதற்குத் தகுந்த நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருவார்களா ?

---

[a] Printed as Appendix II on page 1125 infra.

[30th September 1958

THE HON. SRI P. KAKKAN : கொட்டிக்குப்பம். காந்தடு கிராமங்களில் புதிதாக ஏரிகளை அமைப்பது சம்பந்தமாக அரசாங்கம் பரிசீலனை செய்தது. அது சம்பந்தமாகத் திண்டிவனம் அஸிஸ்டெண்ட் கலெக்டரிடமிருந்து இன்னும் ரிப்போர்ட் வரவில்லை. இருந்தாலும், இதுவரை எனக்குக் கிடைத்திருக்கும் தகவல்களைச் சொல்கிறேன். கொட்டிக்குப்பம் கிராமத்தில் ஏரியை அமைப்பதற்கு 24,000 ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அவ்வளவு செலவில் அங்கே நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்தால், வருடந்தோறும் 18·5 டன் தானியம்தான் விளைவிக்க முடியும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அதைப் பொறுத்தவரையில், (the cost of the scheme works out to Rs. 1,600 per ton) காந்தடு கிராமத்தில் 30 எக்கர் நிலங்களுக்குத்தான் நீர்ப்பாசன வசதி செய்து கொடுக்கப்போகிறோம். அங்கே அத்தனை எக்கர் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி செய்துகொடுப்பதற்கு, 30,800 ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த 30 எக்கர் நிலங்களில் தண்ணீர் பாய்ச்சுவதற்காக, 39 எக்கர் நிலங்களை நாம் "அக்வைர்" செய்ய (ஆர்ஜிதம் செய்ய) வேண்டியிருக்கிறது. இந்தத் திட்டத்தைப் பொறுத்தவரையில் (the cost of the scheme works out to Rs. 4,400 per ton) இதைப் பிறபாடுதான் பரிசீலனை செய்ய வேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

*Marine aquarium*

* 636 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether there is any proposal before the Government to construct a building for housing the Marine Aquarium on the Marina ; and

(*b*) if so, the cost thereof and the stage at which the matter now stands?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) There is a proposal to construct a Marine Aquarium but it has not yet been sanctioned.

(*b*) The estimated cost is about Rs. 9½ lakhs. The proposal is under correspondence with the Government of India for a grant. No provision has also been made in the State Budget.

SRI M. JAGANNATHAN : May I know the amount of grant that is expected from the Government of India?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : We have not received any kind of estimate for the grant from the Government of India.

SRI K. VINAYAKAM : As the existence of the Marine Aquarium in the City of Madras is a main attraction for visitors and its importance could not be belittled, will the Government of Madras take up the matter with the Government and make them agree to contribute at least 50 per cent of the estimated cost?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The Government have asked for a grant from the Central Government and we are awaiting their reply.

30th September 1958]

*Last Grade Servants*

* 637 Q.—Sri K. VINAYAKAM : Will the Hon. the Chief Minister be pleased to state—

(a) whether the Government have received any representation recently from the Last Grade Government Servants' Association (Madras Centre) detailing their grievances;

(b) if so, what their grievances are; and

(c) the action taken thereon?

The Hon. Sri C. SUBRAMANIAM : (a) Yes, Sir, in November 1957.

(b) The grievances mainly relate to general conditions of service such as parity of scales of pay and allowances with those of the Central Government, etc.

(c) Suitable replies have been given to the Association in respect of each of the grievances. Their request for parity of scales of pay and allowances, etc., could not be complied with for the present. The matter has been deferred pending receipt of the recommendations of the Pay Commission appointed by the Government of India.

Sri K. VINAYAKAM : Sir, apart from the emoluments which the servants naturally expect from the Government, will the Government issue instructions to their superior officers who make these servants work at home by asking them to do work like washing their clothes, sending them to the market and all that, that such kind of work will only bring down the morality of the servants?

The Hon. Sri C. SUBRAMANIAM : I hope the question put by the hon. Member here will have the desired effect.

Sri S. LAZAR : What are the main features of the suitable replies?

The Hon. Sri C. SUBRAMANIAM : I think, the hon. Member must put a separate question.

Sri V. K. KOTHANDARAMAN : மைனர் இர்ரிகேஷன் மேஸ்திரிகளுக்கு முன்பு சர்க்கார் 35 ரூபாய் மாதச் சம்பளம் கொடுத்து வந்தது. அதை சர்க்கார் 30½ ரூபாயாகக் குறைத்தார்கள். உடனே அந்த மேஸ்திரிகள், 35 ரூபாயாகக் கொடுக்கவேண்டுமென்று சர்க்காரிடம் முறையிட்டனர். அதன் பேரில், அவர்களுக்கு 35 ரூபாய் மாதச் சம்பளம் கொடுக்க வேண்டுமென்று சர்க்கார் உத்தரவு போட்டு ஒரு வருடமாகியும், இன்னும் அவர்களுக்கு அந்த அளவில் சம்பளம் கொடுக்கப்படவில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா? அவர்களுக்கு அந்த அந்த உத்தரவுப் படி உடனடியாகச் சம்பளம் கொடுக்கப்பட வேண்டும் என்று சர்க்கார் உத்தரவிடுவார்களா?

The Hon. Sri C. SUBRAMANIAM : மூலக் கேள்வி, கடைநிலை ஊழியர்கள் சங்கத்தின் "ரெப்ரெஸென்டேஷனை"ப் பற்றியது. கனம் அங்கத்தினர் இப்போது கேட்ட கேள்வியைத் தனிக் கேள்வியாகப்போட வேண்டும்.

### *Baby food*

* 638 *Q.*—SRI A. A. RASHEED AND SRI M. KARUNANITHI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have recommended to the Union Government for the relaxation in the import of the baby food in view of the fact that the prices of baby food have increased abnormally recently;

(*b*) whether there is any proposal to start a baby food factory by Government in Ootacamund; and

(*c*) if so, when?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) & (*c*) A proposal to set up a baby food factory in the Nilgiris is under the consideration of the Government.

SRI A. A. RASHEED : Is it a fact that Dumex and Glaxo Companies have come forward to open a factory at Ootacamund and if so, will their services be utilized?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no such information.

SRI P. U. SHANMUGAM : குழந்தைகளின் உணவின் விலை மிகவும் ஏறிக்கொண்டே போகிறது. இதைத் தடுக்கச் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குழந்தைகள் உணவு எல்லாம் இறக்குமதி செய்யப்படுவைதான், இந்த நாட்டில் உற்பத்தி செய்யப்படுவை அல்ல. குழந்தைகள் உணவின விலை ஏறுவதைத் தடுப்பதற்கு, சர்க்கார், "கண்ட்ரோல்" முறையைக் கொண்டுவராமல் வேறு வழிகளில் தடுக்க முயற்சிக்கிறது. அதற்காக சர்க்கார், குழந்தைகள் உணவின் மொத்த வியாபாரிகளைக் (ஹோல்ஸேல் டீலர்ஸ்) கூப்பிட்டுப் பேசியது ; அவர்கள் ஒரு ஒப்பந்தத்திற்கு வந்திருக்கிறார்கள். ஒப்பந்தத்தின் அம்சங்களைக் குறிப்பிடுகிறேன். அவர்களுடைய "டீலர்"களையெல்லாம் "சிவில் ஸப்ளைஸ் கமிஷ"னிடம் ரெஜிஸ்டர் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு ரெஜிஸ்டர் செய்யும்போது, அவர்கள் 25 சத விகித லாபத்திற்கு மேல் குழந்தைகள் உணவை விற்கக்கூடாது என்று நிபந்தனை விதிக்கப்படும். அந்த நிபந்தனையை மீறுபவர்களுடைய பெயர்கள் "ரெஜிஸ்டிரேஷன்" லிருந்து நீக்கப்படும். இந்த ஏற்பாட்டின் விளைவாக, சமீபத்தில் சில நாட்களாகக் குழந்தைகள் உணவு குறைந்த விலைக்கு விற்கிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is it a fact that some of the foreign companies also have applied for the starting of this factory?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No foreign company has applied. The matter was under examination. At present there is no application pending from any foreign company. But the baby food factory which I have referred to in my answer, is proposed to be taken up by a co-operative society with the technical assistance of another Dairy Co-operative Society in Denmark.

30th September 1958]

SRI S. LAZAR : குழந்தைகளின் உணவுப் பொருள்கள் போதிய அளவு கிடைக்கவில்லை என்பது சர்க்காரின் கவனத்திற்கு வந்திருக்கிறதா ? அப்படியானால், அவை போதிய அளவு கிடைக்கச் செய்வதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குழந்தைகளின் உணவுப் பொருள்கள் அந்நிய நாடுகளிலிருந்து வரவழைக்கப்படுகின்றன. அவை போதிய அளவு கிடைக்கவில்லை என்று சொல்வது சரியல்ல. அவை போதிய அளவில் கிடைக்கவில்லை என்ற தகவல் சர்க்காருக்கு இதுவரையில் வரவில்லை.

SRI A. A. RASHEED : Is it a fact that the Government of India have liberalized the import of baby foods for the next period ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information about it.

SRI S. RAMAKRISHNA THEVAR : வெளிநாடுகளிலிருந்து போதிய அளவு இறக்குமதியாகாததால்தான், உணவுப் பொருள்களின் விலை ஏறிக்கொண்டு போகிறது என்று சொல்லப்படுகிறது. குழந்தைகளின் உணவுப் பொருள்களை இந்த நாட்டிலேயே ஏன் தயாரிக்கக்கூடாது ? இங்கே உற்பத்தியாகும் அரிசி, கேப்பை முதலிய தானியங்களைக் கொண்டு குழந்தைகள் உணவை தயாரிக்கக்கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூலக் கேள்வியிலும் இது சம்பந்தமாகக் கேட்கப்பட்டிருக்கிறது. அதற்கு நான் முன்பே விடையளித்தேன். குழந்தைகள் உணவைத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை உதகமண்டலத்தில் அமைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

*Home for young orphan girls*

* 639 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) at what places Homes are run for the protection of young orphan girls by the Government and private agencies in the Madras State ;

(*b*) the number of orphan girls in each Home;

(*c*) how many of them have been married off; and

(*d*) the amount provided by the Government towards grants for these Homes in 1958–59?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட விடுதிகளில் 1,214 அனாதை இளம் பெண்கள் இருப்பதாக தெரிகிறது. ஆனால் அதில் 37 பேர்களுக்குத்தான் திருமணம் ஆகியிருப்பதாக குறிப்பில் காணப்படுகிறது. ஆகவே, இந்த விடுதிகளில் இருக்கும் பெண்களை திருமணம் செய்து கொள்ள முன்வருகிறவர்களுக்கு சர்க்கார், ஊக்கம் அளிக்கும் முறையில், சர்க்கார் காரியாலயங்களிலும் முக்கியமான தொழிற்சாலைகளிலும் உத்தியோகம் கொடுப்பதுபற்றி பரிசீலிக்குமா ?

---

[a] Printed as Appendix III on pages 1126–1127 infra.

[30th September 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : திருமணத்தில் கட்டாய திருமணம் செய்ய முடியாது. "இன்ட்யூஸ்மெண்ட்" கொடுத்தும் திருமணம் செய்ய முடியாது. திருமணம் செய்துகொள்வது அவரவர்கள் மனதைப் பொறுத்தது.

SRI S. M. ANNAMALAI : இந்த பெண்களை திருமணம் செய்து கொடுப்பது, ஒரே ஜாதியில்தான் செய்து கொடுக்கிறார்களா ? அவர்கள் திருமணம் செய்து பிற்பாடு சரியான முறையில் வாழ்க்கை நடத்தி வருகிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கல்யாணம் ஆன பிற்பாடு கணவனும் மனைவியும் வாழ்க்கை நடத்துவது அவர்களது பொறுப்பு. சர்க்கார் இதில் ஒன்றும் செய்யமுடியாது.

SRI K. ANBAZHAGAN : 30 வயதிற்கு மேல் பிரம்மச்சாரிகளாக இருப்பவர்கள் இந்த அனாதை விடுதிகளில் உள்ள பெண்களைத்தான் மணந்துகொள்ளவேண்டுமென்று அரசாங்கம் ஏதாவது சட்டம் போட முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சட்டங்கள் போடலாம். ஆனால் கல்யாணம் செய்த பிறகு கல்யாண வாழ்க்கையை இப்படித்தான் நடத்தவேண்டுமென்று சட்டம் போடமுடியுமா ?

*Occupational therapy*

* 640 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether 'Occupational Therapy' is practised in our State ; and

(*b*) if so, the nature of treatment given and the hospitals where 'Occupational Therapy' is practised?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, in two institutions.

(*b*) A statement* is placed on the table of the House.

*Marudaiyar bridge*

* 641 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the scheme for the reconstruction of Marudaiyar bridge near the scene of Ariyalur Railway disaster is ready;

(*b*) the cost of the scheme;

(*c*) when the same will be commenced and completed; and

(*d*) the special engineering devices proposed to be employed therein to withstand heavy and sudden floods like the one that occurred in 1956?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) Rs. 6,00,000.

(*c*) The work was commenced in April 1958 and is expected to be completed in April 1960.

* Printed as Appendix IV on pages 1127–1128 infra.

30th September 1958]

(*d*) No special devices as such have been proposed but full and adequate provision has been made taking all factors into consideration to withstand heavy and sudden floods.

**SRI S. LAZAR:** இந்தப் பாலம் அமைத்திருக்கக்கூடிய இடமாகப் பட்டது, அதிகமாக தண்ணீர் வரும்போது குத்திவிடக்கூடிய முறையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அதற்கு தனிப்பட்ட முறையில் ஏதாவது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறதா ?

**THE HON. SRI P. KAKKAN:** ஏற்கனவே பாதிக்கப்பட்ட பாலத்தை செப்பனிடுவதைவிட புதிதாக ஒரு பாலம் கட்டுவதுதான் நல்லது. ஆகவே இந்த இடத்தைப் பார்த்து அங்கு பாலம் கட்டி வருகிறார்கள். எந்த விதமான கெடுதியும் வராது என்று நினைக்கிறேன். அங்கத்தினரின் யோசனையை கவனிக்கிறேன்.

## *Shark Liver Oil*

* 642 *Q.*—SRI A. VEDARATHNAM: Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether Shark Liver Oil is produced in this State;

(*b*) if so, where;

(*c*) what is the annual production; and

(*d*) if no, whether there is any proposal to establish such a factory; if so, where?

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON:** (*a*), (*b*) & (*c*) Crude Oil is being extracted by the Fisheries Department from the Shark livers collected in the East Coast of this State and the oil is sold to the Oil Factory at Kozhikode. There is no factory in this State now to refine the Crude Oil. About 10 tons of crude oil are at present produced.

(*d*) At present there is no possibility of running an oil factory in this State as at least 30 tons of crude oil would be required for a factory. However, efforts are being made to increase the production of crude oil so as to satisfy the minimum requirement of an oil factory.

**SRI A. VEDARATHNAM:** இங்கிருந்து ஷார்க் லிவர் ஆயில் பாக்டரி கேரளத்திற்கு போய்விட்டதால் அதற்குப் பிறகு நம் ராஜ்யத்தில் அப்படிப் பட்ட பாக்டரி ஒன்றை இங்கு ஆரம்பிக்கவேண்டியது அவசியமல்லவா ? சென்னை கடற்கரையில் சுரா மீன்கள் அதிகமாக கிடைப்பதால் இங்கு அப்படி ஒரு பாக்டரி ஆரம்பிக்க அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON:** சென்னையில் 10 டன் எண்ணெய்தான் கிடைக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அதைக்கொண்டு ஒரு மீன் எண்ணெய் பாக்டரி ஆரம்பிப்பது சிரமமான காரியம். ஆகவே, கூடுதலான முறையில் எண்ணெய் சேகரிக்கும் வழிகளை ஆலோசித்துப் பார்த்து ஒரு ஆயில் பாக்டரி ஏற்படுத்த அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது.

*Transfer of Military Units from the Fort St. George*

* 643 *Q*.—SRI P. G. MANICKAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை கோட்டையில் இருந்து வரும் ராணுவப் பண்டகளை அங்கிருந்து காலி செய்து அதிக இடவசதி இருக்கும் ஆவடியிலும், பறங்கிமலையிலும் குடியேறச் செய்ய வேண்டுமென்று மத்திய சர்க்காருக்குச் சென்னை சர்க்கார் கடிதப் போக்குவரத்துக்கள் நடத்திக்கொண்டிருக்கிறார்களா ?

(ஆ) அவ்வாறு இருப்பின், சென்னை சர்க்காரின் இவ்வாலோசனைகளை இந்திய கவர்மெண்டார் ஏற்றுக்கொண்டார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Employment Exchange*

* 644 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) எம்பளாய்மெண்டு எக்ஸ்சேஞ் போர்டில் பதிவு செய்யும் ஆட்களை முறையாக வேலைக்கு அனுப்புகிறார்களா ?

(ஆ) அப்படி செய்கிறார்களா, இல்லையா என்பதைப்பற்றி செக்கப் செய்யப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Submissions against notified vacancies are made according to the priority to which the candidates belong. Candidates not belonging to pricrity categories are submitted strictly according to the seniority in registration except when special qualifications are prescribed by employers.

(*b*) Yes, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : ஒரு உத்தியோகத்திற்கு ஒரு ஆள் தேவை என்று சொன்னால் எட்டு, பத்து பேர்கள் அனுப்பப் படுகிறார்கள். இதற்கு காரணம் என்ன ? அப்படியில்லாமல் ஒரு வேலைக்கு ஒரு ஆளை மட்டிலும் அனுப்ப சர்க்கார் உத்தரவிடுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒரு குறிப்பிட்ட வேலைக்குள்ள தகுதி எவ்வாறு இருக்கும் என்பதைப்பற்றி "எம்பளாய் மெண்ட் எக்ஸ்சேன்ஞ்" க்கு நிர்ணயம் செய்ய முடியாது. ஆகவே ஒருவருக்கு மேல் அனுப்புகிறார்கள், சில சமயங்களில்.

SRI N. MARUDACHALAM : "எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேன்ஞ்" ஆபீஸில் வேலையில்லாமல் பதிவு செய்து கொண்டவர்கள் எத்தனை பேர் ? எத்தனை பேர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTHAVATSALAM : தனி கேள்வி வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : சர்க்கார் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேன்ஞ் போர்டில் இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ரென்யூ செய்கிற நிலை இருப்பதால் அந்நிலையில் அதை மறந்துவிடக் கூடிய நிலை ஏற்படுகிறது. ஆகவே, ஒருமுறை அவர்கள் பதிவு செய்கிறார்கள் என்று சொன்னால் அதுவே போதுமானதல்லவா ? அப்படி ஒரு ஏற்பாட்டை சர்க்கார் செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒரு முறை பதிவு செய்துவிட்டால், நாலு மாதத்திற்கு பிறகு அவர்கள் இன்னும் வேலையில்லாமல் இருக்கிறார்களா என்று தெரியாது. பேர் அனுப்பினால் தகவல் இல்லாமலே போய் விடுகிறது. ஆகவேதான் ரென்யூ செய்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறது.

30th September 1958]

SRI S. LAZAR : எங்கெங்கு வேலையிருக்கிறது என்ற தகவல் இந்த காரியாலயங்களுக்கு வந்தவுடன் அவர்கள் அந்த "ப்ரையாரிட்டி லிஸ்ட்" பிரகாரம் அனுப்பும்போது அப்படி ஆஜராகவேண்டிய தினத்திற்கு எவ்வளவு நாட்கள் முன்னதாக அது அனுப்பப்படுகிறது ? வெகு சநதர்ப்பங்களில் அதன் கெடு தீர்ந்தபிறகுத்தான் அனுப்பப் படுகிறது என்ற புகார் வந்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி ஒரு புகாரும் வரவில்லை, தகவலும் வரவில்லை. குறிப்பான விவரங்களை அங்கத்தினர் அவர்கள் கொடுத்தால் அதை கவனிக்கறேன்.

SRI S. M. ANNAMALAI : பல இலாகாக்களிலும் ஆட்கள் தேவை என்று வரும்போது இந்த வேலை தேடித்தரும் நிலயங்களின் மூலமாகத்தான் எடுக்கவேண்டுமென்று சர்க்கார் விதியிருக்கிறது. அப்படி அந்த விதியை மாற்றி அவர்களே நேரடியாக ஆட்களை தேர்ந் தெடுத்துக்கொள்கிறுர்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தடுப்பதற்கு ஏதாவது திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மாதிரி புகார்கள் இருந்தால், அதை என் கவனத்திற்கு கொண்டு வந்தால் கவனிக்கிறேன்.

SRI T. IRUSAPPAN : வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தில் எஸ்.எஸ்.எல்.ஸி., இன்டர்மிடியட் படித்துவிட்டு பதிவு செய்து கொள்கிறுர்கள். 25 வயதிற்குள் வேலையில் அமரவேண்டுமென்று விதி யிருக்கிறது. அதற்குள் வேலை கிடைக்கவில்லை என்றுல் அப்படி வேலை கிடைக்கும்படி சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : "எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேன்ஞ்", வேலை தேடித் தரும் ஸ்தாபனமாகும். ஆனுல் வேலையில் அமர்த்துவதற்கு சில விதிகள் இருக்கின்றன. அது வேறு விஷயம்.

*Travelling allowances drawn by Ministers*

* 645 *Q.*—SRI P. U. SHANMUGAM : Will the Hon. the Chief Minister be pleased to state the amount of Travelling Allowances drawn by each Minister who undertook a tour and participated in the Election propaganda in connection with the Tuticorin Bye-election held recently?

THE HON. SRI C. SUBRAMANIAM : Only the Chief Minister, the Home Minister, the Minister for Finance and the Minister for Works visited Tuticorin in connection with the Tuticorin Bye-election, but no Travelling Allowance was claimed by them.

SRI D. S. AUTHIMOOLAM : உப தேர்தல்களில் கூடுமான வரையில் மந்திரிகள் பங்கு எடுத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. ஆகையால் அப்படி ஒரு "கன்வென்ஷன்" ஏற்படுத்துவது நல்லதென்று "சீப் எலெக்டோரல் கமிஷனர்" ஏதாவது தாக்கீது அனுப்பினுர்களா ? அதைப்பற்றி சர்க்கார் ஆலோசனை செய்திருக்கிறுர்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அம்மாதிரி தாக்கீது ஒன்றும் அனுப்பப்படவில்லை. இந்த சர்க்காரைப் பொறுத்த வரையில், மந்திரிகள் முக்கியமாக தேர்தல்களில் பங்கு எடுத்துக்கொள்வது மிக அவசியம். என்னென்ன காரியங்கள் செய்வோம் என்று வாக்குறுதி கொடுத்தோமோ அவைகளை எந்தளவு செய்திருக்கிறேம், பிற்காலத்தில் என்ன செய்யப் போகிறேம் என்றெல்லாம் திட்டவட்டமாக மக்களிடம் எடுத்துச் சொல்லி வோட்டு கேட்பது நல்லது. அப்படி நாங்கள் முன்பு கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றவில்லை என்றுல், மந்திரிகள் வந்த

[30th September 1958

சொன்னார்களே அவைகளை நிறைவேற்றவில்லையே என்று கேட்க சந்தர்ப்பம் இருக்கும். யாரோ பேசினால் அவர்கள் பேசியதற்கு மந்திரிகள் பொறுப்பாளிகளாகமாட்டார்கள் என்று சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN : பொதுவாக தேர்தல் நேரத்தில் அமைச்சர்கள் வாக்குறுதி அளிப்பது, தேர்தல்களில் வாக்காளர்களை தங்கள் பக்கம் இழுக்க காட்டப்படும் ஆசை வார்த்தைகள் ஆகும். அப்படி ஆசை வார்த்தைகள் காட்டுவது நியாயமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நாங்கள் என்ன செய்கிறோம், என்ன செய்யப் போகிறோம் என்ற திட்டங்களை விளக்குவது மிக அவசியம். வெறும் ஆசை வார்த்தைகளாக இருந்தால், யார் ஆசை வார்த்தைகள் காட்டுகிறார்கள், யார் காரியங்களை செய்கிறார்கள் என்பதை மக்கள் நன்கு உணர்ந்து கொள்வார்கள்.

*Medical Colleges*

* 646 *Q.*—MR. SPEAKER : The hon. Member, Sri T. T. Daniel is not in his seat. The question and the answer will be printed in the proceedings.

SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the authorities of the Medical Colleges in the State have issued notification cancelling admission to Intermediate and B.Sc., students to the First Year M.B.B.S. Course ; and

(*b*) whether the Government propose to adopt measures to provide accommodation for these students as well?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) No, Sir.

*Aid to Harijan ryots*

* 647 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state the allotment made in 1958–59 district-wise for the grant of subsidies to Harijan ryots for the purchase of plough bulls, agricultural implements and seeds?

THE HON. SRI P. KAKKAN : A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஹரிஜன விவசாயியோடுகூட சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சென்று அவர்களுக்கு மாடுகள் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தும் அம்மாதிரி நடைபெறுவதில்லையாதலால் அவர்களோடு சென்று அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதற்கு அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்குமா என்று அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : ஜில்லா ஹரிஜன இலாகா அதிகாரிகள் அப்படித்தான் மாடுகள் வாங்கி திருவிளக்குச் சீட்டு விழுகிறவர்களுக்கு மாடுகள் வழங்கி வருகிறார்கள். ஏதாவது குறிப்பிட்ட புகார் இருந்தால் கனம் அங்கத்தினர் அதை எழுத்து மூலமாக எனக்குத் தெரிவித்தால் நான் நடவடிக்கை எடுத்துக்கொள்கிறேன்.

[a] Printed as Appendix V on page 1129 infra.

30th September 1958]

**Sri S. LAZAR :** எங்கெங்கு வேலையிருக்கிறது என்ற தகவல் இந்த காரியாலயங்களுக்கு வந்தவுடன் அவர்கள் அந்த "ப்ரையாரிட்டி லிஸ்ட்" பிரகாரம் அனுப்பும்போது அப்படி ஆஜராகவேண்டிய தினத்திற்கு எவ்வளவு நாட்கள் முன்னதாக அது அனுப்பப்படுகிறது? வெகு சநதர்ப்பங்களில் அதன் கெடு தீர்ந்தபிறகுத்தான் அனுப்பப் படுகிறது என்ற புகார் வந்திருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அப்படி ஒரு புகாரும் வரவில்லை, தகவலும் வரவில்லை. குறிப்பான விவரங்களை அங்கத்தினர் அவர்கள் கொடுத்தால் அதை கவனிக்கறேன்.

**Sri S. M. ANNAMALAI :** பல இலாகாக்களிலும் ஆட்கள் தேவை என்று வரும்போது இந்த வேலை தேடித்தரும் நிலயங்களின் மூலமாகத்தான் எடுக்கவேண்டுமென்று சர்க்கார் விதியிருக்கிறது. அப்படி அந்த விதியை மாற்றி அவர்களே நேரடியாக ஆட்களை தேர்ந் தெடுத்துக்கொள்கிறார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தடுப்பதற்கு ஏதாவது திட்டமிருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அம்மாதிரி புகார்கள் இருந்தால், அதை என் கவனத்திற்கு கொண்டு வந்தால் கவனிக்கிறேன்.

**Sri T. IRUSAPPAN :** வேலை தேடித் தரும் ஸ்தாபனத்தில் எஸ்.எஸ்.எல்.ஸி., இன்டர்மிடியட் படித்துவிட்டு பதிவு செய்து கொள்கிறார்கள். 25 வயதிற்குள் வேலையில் அமரவேண்டுமென்று விதி யிருக்கிறது. அதற்குள் வேலை கிடைக்கவில்லை என்றால் அப்படி வேலை கிடைக்கும்படி சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** "எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேன்ஞ்", வேலை தேடித் தரும் ஸ்தாபனமாகும். ஆனால் வேலையில் அமர்த்துவதற்கு சில விதிகள் இருக்கின்றன. அது வேறு விஷயம்.

*Travelling allowances drawn by Ministers*

* 645 *Q.*—**Sri P. U. SHANMUGAM :** Will the Hon. the Chief Minister be pleased to state the amount of Travelling Allowances drawn by each Minister who undertook a tour and participated in the Election propaganda in connection with the Tuticorin Bye-election held recently?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** Only the Chief Minister, the Home Minister, the Minister for Finance and the Minister for Works visited Tuticorin in connection with the Tuticorin Bye-election, but no Travelling Allowance was claimed by them.

**Sri D. S. AUTHIMOOLAM :** உப தேர்தல்களில் கூடுமான வரையில் மந்திரிகள் பங்கு எடுத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது. ஆகையால் அப்படி ஒரு "கன்வென்ஷன்" ஏற்படுத்துவது நல்லதென்று "சீப் எலெக்டோரல் கமிஷனர்" ஏதாவது தாக்கீது அனுப்பினார்களா ? அதைப்பற்றி சர்க்கார் ஆலோசனை செய்திருக்கிறார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அம்மாதிரி தாக்கீது ஒன்றும் அனுப்பப்படவில்லை. இந்த சர்க்காரைப் பொறுத்த வரையில், மந்திரிகள் முக்கியமாக தேர்தல்களில் பங்கு எடுத்துக்கொள்வது மிக அவசியம். என்னென்ன காரியங்கள் செய்வோம் என்று வாக்குறுதி கொடுத்தோமோ அவைகளை எந்தளவு செய்திருக்கிறோம், பிற்காலத்தில் என்ன செய்யப் போகிறோம் என்றெல்லாம் திட்டவட்டமாக மக்களிடம் எடுத்துச் சொல்லி வோட்டு கேட்பது நல்லது. அப்படி நாங்கள் முன்பு கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றவில்லை என்றால், மந்திரிகள் வந்து

[30th September 1958

சொன்னார்களே அவைகளை நிறைவேற்றவில்லையே என்று கேட்க சந்தர்ப்பம் இருக்கும். யாரோ பேசினால் அவர்கள் பேசியதற்கு மந்திரிகள் பொறுப்பாளிகளாகமாட்டார்கள் என்று சொல்லலாம்.

SRI K. ANBAZHAGAN : பொதுவாக தேர்தல் நேரத்தில் அமைச்சர்கள் வாக்குறுதி அளிப்பது, தேர்தல்களில் வாக்காளர்களை தங்கள் பக்கம் இழுக்க காட்டப்படும் ஆசை வார்த்தைகள் ஆகும். அப்படி ஆசை வார்த்தைகள் காட்டுவது நியாயமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: நாங்கள் என்ன செய்கிறோம், என்ன செய்யப் போகிறோம் என்ற திட்டங்களை விளக்குவது மிக அவசியம். வெறும் ஆசை வார்த்தைகளாக இருந்தால், யார் ஆசை வார்த்தைகள் காட்டுகிறார்கள், யார் காரியங்களை செய்கிறார்கள் என்பதை மக்கள் நன்கு உணர்ந்து கொள்வார்கள்.

*Medical Colleges*

* 646 Q.—MR. SPEAKER : The hon. Member, Sri T. T. Daniel is not in his seat. The question and the answer will be printed in the proceedings.

SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the authorities of the Medical Colleges in the State have issued notification cancelling admission to Intermediate and B.Sc., students to the First Year M.B.B.S. Course ; and

(b) whether the Government propose to adopt measures to provide accommodation for these students as well?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) & (b) No, Sir.

*Aid to Harijan ryots*

* 647 Q.—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state the allotment made in 1958–59 district-wise for the grant of subsidies to Harijan ryots for the purchase of plough bulls, agricultural implements and seeds?

THE HON. SRI P. KAKKAN : A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஹரிஜன விவசாயியோடுகூட சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சென்று அவர்களுக்கு மாடுகள் வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று சர்க்காரால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தும் அம்மாதிரி நடைபெறுவதில்லையாதலால் அவர்களோடு சென்று அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதற்கு அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்குமா என்று அறியவிரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : ஜில்லா ஹரிஜன இலாகா அதிகாரிகள் அப்படித்தான் மாடுகள் வாங்கி திருவிளக்குச் சீட்டு விழுகிறவர்களுக்கு மாடுகள் வழங்கி வருகிறார்கள். ஏதாவது குறிப்பிட்ட புகார் இருந்தால் கனம் அங்கத்தினர் அதை எழுத்து மூலமாக எனக்குத் தெரிவித்தால் நான் நடவடிக்கை எடுத்துக்கொள்கிறேன்.

[a] Printed as Appendix V on page 1129 infra.

30th September 1958]

*Over-head tank*

* 648 *Q.*—SRI V. SUBBIAH : Will the Hon. the Chief Minister be pleased to state what action was taken on the resolution of the Koilpatti Panchayat Board regarding the construction of an over-head tank for the supply of drinking water?

THE HON. SRI C. SUBRAMANIAM : No resolution from Koilpatti Panchayat for the sanction of the construction of the over-head tank under the Local Development Works Programme was received by Government. The Collector of Tirunelveli had however requested the Government for permission to take up the work under the Local Development Works Scheme. The request could not be acceded to as Koilpatti Panchayat lies inside the Koilpatti Community Development Block and the sanction of works under the Local Development Works Scheme in Block Areas is prohibited.

SRI V. SUBBIAH : நம்முடைய மாகாணத்தில் கோவில்பட்டி ஒரு பெரிய நகரம். பொருளாதாரத்திலும் சிறந்திருக்கக்கூடிய அங்கே குடி தண்ணீர் வசதியின்றி மக்கள் படுகிற கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. பெரிய குளங்கள் இல்லாத அந்த நகரத்திற்குக் குடி தண்ணீர் சப்ளை செய்ய லோகல் டெவெலெப்மெண்டு வொர்க்ஸ் மூலமாக ஏற்பாடு செய்ய அரசாங்கத்தார் முன் வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கோவில்பட்டியில் உள்ள கஷ்டத்தைக் குறிப்பிட்டு குடி தண்ணீர் வசதி அங்கு செய்து தரப்பட வேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறேன். லோகல் வொர்க்ஸ் திட்டத்தின் கீழ் அது முடியுமா என்பது சந்தேகம்.

*Shooting of certain species of birds*

* 649 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have recently issued an order prohibiting hunting of certain species of birds in Chingleput and other districts ; and

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The Government have issued orders prohibiting shooting of certain species of birds around the Vedanthangal Bird Sanctuary covering certain taluks of Chingleput, North Arcot and South Arcot districts from August to May. This is an extension of a previous order which covered only a radious of 20 miles in the Madurantakam taluk alone. The species of birds listed have also been amplified.

(*b*) Vedanthangal is an important sanctuary for migratory birds. It has been observed that the birds take shelter not only at Vedanthangal but also at other lakes round about. With a view to afford protection to the birds resorting to the sanctuary and its neighbourhood and save them from unscrupulous shikaris shooting them indiscriminately, the ban on the shooting of these birds in the extended area has been imposed by the Government from August to May.

[30th September 1958

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that wild duck and snipes do not breed anywhere in India except in Kashmir? If so, will the Government relax the ban on the shooting of at least these two birds?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I wonder how the hon. Member is interested in such birds, if they are not available anywhere else except in Kashmir.

**SRI T. S. RAMASWAMY PILLAI :** பட்சிகளை வளர்ப்பதற்கு வேறு என்ன என்ன முறைகளை அரசாங்கம் கையாள்கிறார்கள் ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அநேக திட்டங்கள் இருக்கின்றன. தண்ணீர் இல்லாத குறை நீக்கப்பட்டு வருகிறது. இன்னும் என்ன என்ன திட்டங்கள் என்று சொல்ல வேண்டுமானால் தனியாகக் கேள்வி போட்டால் நல்லது. அப்போது அநேக விவரங்கள் கொடுக்க முடியும்.

**SRI M. JAGANNATHAN : May I know. Sir, whether any unscrupulous shikaris, who have contravened this ban, have so far been punished ?**

**THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information.**

**SRI M. C. MUTHUKUMARASWAMY :** அரசாங்கம் பட்சிகளைக் காபந்து செய்யவேண்டுமென்று திட்டம் வைத்துக்கொண்டு நரிக் குறவர் களுக்கு பட்சிகளை வேட்டையாடுபவர்களுக்கு லைசென்ஸ் கொடுப்பது நியாயமா என்று கேட்கிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இம்மாதிரி திட்டங்கள் சில குறிப்பிட்ட இடங்களில்தான் நடைபெறுகின்றன. எங்கும் தடை விதிக்கவேண்டுமென்பது சரியல்ல.

**SRI A. GOVINDASAMY :** வேடந்தாங்கல் ஏரிக்கு அதிகப்படி தண்ணீர் வர என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அதிகப்படியாகத் தண்ணீர் வருவதற்கு ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு இப்போது சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. மரங்கள் வளர்ப்பது, காட்டு இலாகாவினால் செய்யப் பட்டு வருகிறது.

***Folidol.***

* 650 *Q.*—**SRI A. VEDARATHNAM :** கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) உணவில் விஷம் கலந்த தவறு நேரக் காரணமாயிருந்தவர்கள் யார் ? அவர்கள் பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

(ஆ) பாலிடால் **(Folidol)** மருந்தை தாவரங்களுக்கு உபயோ கிக்கும் போது அதன் பலன் மூலம் அபாயங்கள் நேராவண்ணம் தடுக்க அரசாங்கம் அம்மருந்தைப்பற்றி ஏதேனும் ஆராய்ச்சி நடத்தியிருக்கிறதா ?

**THE HON. SRI M.A. MANICKAVELU : (*a*) No import or sale of any contaminated food stuff was reported in this State. The question of fixing responsibility does not therefore arise.**

**(*b*) No, Sir.**

30th September 1958]

**Sri A. VEDARATHNAM :** உணவுப் பயிர்களில் விழுகிற பூச்சியைத் தடுப்பதற்காக தெளிக்கப்படுகிற பாலிடால் மருந்து மூலமாக விஷம் பரவாமல் இருப்பதற்கு ஏதாவது ஆராய்ச்சி நடந்திருக்கிறதா ? அம்மாதிரி பரவாமல் இருக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இம்மாதிரியான பச்சை மருந்தை விற்கும்போதுகூடவே எப்படி இதை உபயோகப்படுத்த வேண்டும் என்பதற்கு ஒரு அறிக்கையும் கொடுக்கிறார்கள். மேலும் பாலிடால் கொடுக்கும்போது கூடவே ஒரு ஆள் சென்று அதை எப்படி உபயோகப்படுத்துவது என்று சொல்லி வருகிறார்கள்.

*Road Inspectors and Attenders in the Highways Department*

* 651 *Q*—**Sri M. C. MUTHUKUMARASWAMY :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்தில் பெரும்பாட்டை (**Highways**) இலாகாவில் பணிபுரியும் பர்மனெண்ட் (**permanent**) டெம்பரரி) (**temporary**) ரோடு இன்ஸ்பெக்டர்கள், ஆபீஸ் அட்டெண்டர்கள் எத்தனை பேர்—

(ஆ) இவர்களில் ஹரிஜன வகுப்பினர் எத்தனை பேர் ?

**The Hon. Sri P. KAKKAN :**

| | Total. (1) | Harijans among them. (2) |
|---|---|---|
| Number of *permanent* Road Inspectors .. | 657 | 26 |
| Number of temporary Road Inspectors .. | 1582 | 58 |
| Number of permanent office attenders .. | 56 | 5 |
| Number of temporary office attenders .. | 157 | 20 |

**Sri M. C. MUTHUKUMARASWAMY :** இந்த அசிஸ்டெண்டுகள் தொடர்ந்து வேலை செய்து வந்தும்கூட இன்னும் அநேகர் பர்மனெண்ட் செய்யப்படாமலேயே இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதற்குத் தீவிர நடவடிக்கை எடுத்து காயம் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri P. KAKKAN :** கனம் அங்கத்தினர் கேட்ட கேள்வி ஹரிஜன வகுப்பார் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் என்பதுதான். தனியாக வேறு கேள்வி போட்டால் நான் பதிலளிக்கிறேன்.

*Revenue Secretariat*

* 652 *Q.*—Sri M. SELVARAJ (on behalf of Sri A. V. P. **Asaithambi**) : Will the Hon. the Chief Minister be pleased to state whether it is a fact that Officers not qualified for Deputy Collector's post or not having revenue qualifications are being posted to the Revenue Department of the Secretariat?

The Hon. Sri C. SUBRAMANIAM : " Yes Sir. In view of the single unit system for Assistant Secretaries and Deputy Secretaries, such postings have occasionally to be resorted to in vacancies of short duration, though as far as possible this is being avoided particularly when filling up long term vacancies. I may

30th September 1958] [Sri S. Lazar]

என்றும் சொன்னார்கள். அதோடு அதிகாரிகள் கையில்தான் இப்போதும் கூடுதல் அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது என்றும் பஞ்சாயத்துக்களுக்கோ அல்லது பஞ்சாயத் கவுன்ஸிலுக்கோ அதிகமான அதிகாரம் கொடுக்கப்படவில்லை என்றும் சில நபர்கள் பேசினார்கள். அவ்விதம் எல்லாம் பேசினவர்கள், இப்போது இந்த மசோதா வந்த பிறகாவது, உள்ளபடியே அரசாங்கத்தினுடைய எண்ணம் அந்த அடிப்படையில் இருந்ததா அல்லது உண்மையிலே ஸ்தல சர்க்கார்கள் அமைக்கவேண்டும் என்ற எண்ணத்தில் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறதா என்பதை உணருவார்கள் என்று நினைக்கிறேன். இப்போது குறிப்பாகச் சொல்ல முடியும், இதைப்போல பல ஸ்தல சர்க்கார்கள் நமது நாட்டில் மட்டுமல்லாமல் மற்ற பல வெளிநாடுகளிலும் நடந்து வருகின்றன. குறிப்பாக இங்கிலாந்து, அயர்லாந்து, ஸ்காட்லாந்து என்ற இடங்களில் இந்த ஏற்பாடு இருந்து வருகின்றன. ஆனால் நாம் இயற்றியிருக்கின்ற சட்டத்தின் மூலம் அவர்களுக்குக் கிடைத்திருக்கின்ற அதிகாரங்களை விடவும், பொறுப்புகளை விடவும், வாய்ப்புகளை விடவும், நமக்கு அதிகமாக கிடைக்கிறது என்பதற்குச் சில குறிப்புகளைச் சொல்ல முடியும். அங்கெல்லாம் ஸ்தல சர்க்கார்கள் அபிவிருத்தி திட்டங்களில் ஈடுபடுவதற்கு வாய்ப்பு கிடையாது. ஆனால் நாம் இயற்றி இருக்கக்கூடிய மசோதாவின் மூலம் நமது அன்றாடத் தேவைகளில் அந்தந்த ஸ்தல சர்க்கார்களுக்கு, ஈடுபடுவதோடு கூட அதை நிறைவேற்றுவதற்கும் திட்டங்களை நடைமுறையில் கொண்டுவருவதற்கும் வேண்டிய வாய்ப்பை இந்தச் சட்டத்தின் மூலம் கொடுத்திருக்கிறோம் என்று சொன்னால் உள்ளபடியே அதை எல்லோரும் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால் குறிப்பாகச் சில மாறுதல்களை மட்டும் நாம் பார்க்கமுடியும். அங்கு ஏற்பட்டிருக்கக்கூடிய ஸ்தல சர்க்கார்களுக்கு அவர்களுக்கு கொடுத்திருக்கக்கூடிய அதிகாரங்களோடு கூட போலீஸ் நிர்வாக அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த முறையில் நமக்கு இந்த மசோதாவில் இப்போது இல்லையென்று சொன்னாலும் கூட 11-40 a.m. இந்தச் சட்டத்தின் அடிப்படையில் நிர்வாகம் எவ்வளவு திறமையாக நடக்கிறது என்பதை பார்த்துக்கொண்டு ஒருவேளை பின்னால் இந்த அதிகாரத்தையும் இங்குள்ள ஸ்தல சர்க்கார்களுக்கு கொடுக்கவேண்டி நேரிடலாம். ஆகவே இந்த அளவிற்குச் சிறப்பான ஒரு சட்டத்தை இயற்றியதற்கு நாம் உள்ளபடியே பெருமைபடத்தான் வேண்டும். இந்த மசோதாவில் இருக்கக்கூடிய முக்கியமான பகுதிகளை நாம் அறிவோம். ஆரம்பத்தில் கிராமப் பஞ்சாயத்துக்கள், பிறகு பெரிய கிராமங்களுக்கு டவுன்ஷிப், பெரிய பெரிய இடங்களைச் சேர்த்து பஞ்சாயத்து கவுன்சில், இவைகளுக்கெல்லாம் ஆலோசனை சொல்லக்கூடிய முறையில் டெவலப்மெண்ட் கவுன்ஸில், அதையடுத்து இங்கு நடக்கக்கூடிய சட்ட சபை, இப்படி இந்த அமைப்பைப் பார்க்கும்போது, நல்ல ஒரு அமைப்பை ஏற்படுத்தியிருக்கிறோம் என்று நாம் பெருமை பட முடியும்.

ஆரம்பத்தில் இருக்கக்கூடிய கிராமவாசிகள் அவரவர்களுடைய தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள, நேராக சென்னை வந்து அரசாங்கத்தைப் பார்க்க வேண்டிய அவசியம் அல்லாது, அவர்களுடைய தேவைகளை—அவர்களுடைய குறைகளை—அங்கேயே நிவர்த்தி செய்துகொள்ளக்கூடிய முறையில் இந்தச் சட்டத்தை இயற்றிக் கொடுப்பதால், அவர்களுக்கு எவ்வளவோ சௌகரியமும் வாய்ப்பும் ஏற்பட்டிருக்கிறது. ஒரு சிலர் சொல்லக்கூடும், "ஏற்கனவேயே இந்த வசதியை ஏற்படுத்திக் கொடுக்கவில்லையா? இந்தச் சட்டத்தினால்தானா ஏற்பட்டிருக்கிறது?" என்று. இதை நன்றாகப் பரிசீலனை செய்து பார்த்தால் புரிந்துகொள்ள முடியும். ஏற்கனவே கொடுத்திருந்த அதிகாரங்கள் குறைவாக இருந்தன. ஆங்காங்கு ஒரு சில வரிகளைப் போட்டு, குடி தண்ணீர், சாக்கடை முதலிய வசதிகளைத் தேடிக்கொள்ள முடியுமே தவிர, இன்றைக்கு சட்டத்தில் உள்ள நீர்ப்பாசன வசதிகளைச் செய்து கொள்ளும் பொறுப்போ, ரோடுகளைப் பராமரிக்கும் பொறுப்போ அல்லது பள்ளிகளை கவனிக்கும் வாய்ப்போ, இன்னும் சொல்லவேண்டுமானால் அபிவிருத்தித் திட்டங்கள் அத்தனையையும் தாங்களே ஏற்று நடத்தக்கூடிய வசதிகள் அப்போது கிடையாது. இந்தச் சட்டத்தில் அத்தனை அம்சங்களையும் அள்ளிக் கொடுத்திருக்கிறார்கள். இனிமேல் குறைகள் இருந்தால்,

அவைகளை நிவர்த்தி செய்யாதது அரசாங்கத்தின் குற்றமோ அல்லது அரசாங்கத்தை நடத்துகிற அரசாங்க உத்தியோகஸ்தர்களின் குற்றமோ என்ற நிலை இருக்காது. ஏதாவது குறைகள்—தேவைகள்—இருந்தால் ஆங்காங்கு இருக்கக்கூடிய நபர்களே—கிராமவாசிகளே—அதற்குப் பொறுப்பு என்ற முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது.

அதுமட்டுமல்ல, ஒரு சட்டத்தை இயற்றிக் கொடுத்து, அதை நிறைவேற்ற பண வசதியில்லை என்ற இக்கட்டான நிலையில் வைக்காமல்—பணத்திற்காக ஏங்கி நிற்கும் நிலை கொடுக்காமல்—வரி வசூலிக்கும் பொறுப்பைக் கொடுத்திருப்பதோடு, மற்றும் மூன்று வகைகளில் அரசாங்கம் உதவி செய்வதற்கும் இதிலே வசதியிருக்கிறது. பொது வசதிக்கான நிதியை அரசாங்கம் கொடுக்கிறது, ரெவின்யூ நிதியில் இருந்து ஒரு பகுதியைக் கொடுக்கிறது, அதேபோல மற்ற வரிகளிலிருந்து ஒரு பகுதியைக் கொடுக்கிறது. இப்படி மூன்று வகைகளினால் வசதி செய்துகொடுப்பதோடு கூட ஆங்காங்கு இருக்கக்கூடிய நிலைமைக்கு தக்கவாறு மற்ற வரிகளை—வரி என்று சொல்லும்போது சுமை என்ற முறையில் அல்ல—தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற மக்கள் ஆங்காங்கு நிலைமைக்குத் தக்கவாறு வரிகளைப் போட்டு, அப்படி வரி வசூலிக்கக்கூடிய வாய்ப்பைக் கொடுத்து, வரிகள் வாயிலாக நல்ல வருமானம் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார்கள். இந்தப் பிரிவைப்பற்றி தனிக் கமிட்டியில் பரிசீலனை செய்துகொண்டிருந்தபோது, சில அங்கத்தினர்கள் ஒரு சிறு திருத்தம் கொண்டு வந்தார்கள். அவர்கள் சொன்னது, வரி விதிக்கக் கூடிய முறையில் ஆங்காங்கு கிராமப் பஞ்சாயத்துக்களில் எல்லோரும் அவரவர் இஷ்டப்படி விதிக்கக்கூடிய வாய்ப்புக் கொடுக்காது ஒரு வாகனத்திற்கு 1 ரூபாய் வரி என்றிருந்தால், ஒரு கிராமத்தில் மட்டுமல்ல, எல்லா கிராமங்களிலும் ஒரே ரூபாய் போடவேண்டும்—ஒரே முறையான வரியைப் போடவேண்டும்—என்று வற்புறுத்திச் சொன்னார்கள். ஆனால் அப்போது அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள், நாம் கிராமங்களில் ஆங்காங்கு ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்திக் கொடுக்கக் கூடிய நேரத்தில், அந்த கிராமத்தின் வசதிக்குத் தக்கவாறு, அவர்களுக்கு இருக்கும் வாய்ப்புக்குத் தக்கவாறு, அந்தக் கிராமத்தின் தேவைக்குத் தக்கவாறு, அவர்கள் வரிகளைப் போட்டுக்கொள்ளட்டும், அதை விட்டு வரி விகிதத்தை நாமே ஏற்படுத்திக் கொடுத்தால் நாம் அதைத் திணிப்பதாக ஆகும். ஆகையால் அந்த முறை வேண்டாம் என்று சொன்னார்கள். அதைத் தனிக் கமிட்டியும் ஏற்றுக் கொண்டது. அந்த முறையைப் பார்க்கும்போது வெறும் அதிகாரத்தைக் கொடுக்காது வேண்டிய பண வசதியும் சட்டத்தில் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்படி பண வசதியைச் செய்து கொடுக்கும்போது, வரி வசூலிக்கும் கஷ்டத்தை அவர்களுக்கு நாம் கொடுக்கவில்லை. வரிகளை வசூலிக்க ஏற்கனவே அரசாங்க அமைப்பிலே இருக்கக்கூடிய அதிகாரிகளைக் கொண்டும், கிராம உத்தியோகஸ்தர்களைக் கொண்டும், வசூலிக்கவேண்டும் என்ற அடிப்படையில் இந்தச் சட்டத்திலே அமைத்திருப்பது, இப்போது இருக்கும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு, குறிப்பாக பஞ்சாயத்துக்களுக்கு, பெரும் பாரம் இறங்கினதாக ஆகும். இப்போது, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், அந்த மக்களுக்கே வரி போட்டு, அதையும் தாங்களே வசூலிக்கவேண்டிய நிலைமையில் இருக்கின்றார்கள். அவர்கள் இந்த நிலைமையை விரும்பவேயில்லை. அந்த முறை இருக்குமானால், பொதுமக்களுடைய அதிருப்தி ஏற்பட்டு, பின்னால் அவர்களைப்பற்றித் தவறான அபிப்பிராயம் ஏற்படக் கூடியதாக இருக்கிறது. அந்த நிலைமையை மாற்றி, வரி வசூலிக்கும் முறையை அரசாங்கம் செய்து கொடுக்கவேண்டுமென்று இப்போது இயற்றியிருக்கும் சட்டம் பாராட்டுக்குரியது. இதைப் பஞ்சாயத்துத் தலைவர்களும் மற்றவர்களும் முழுமனதோடு ஏற்றுக்கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அடுத்தபடியாக இந்த டவுன்ஷிப் கமிட்டி. டவுன்ஷிப் கமிட்டிகளுக்கு சில அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறார்கள். டவுன்ஷிப் கமிட்டி எந்த அளவுக்குத் தேவை என்பதைப்பற்றி இப்போது இருக்கும் டவுன்ஷிப் கமிட்டியிலிருந்து அறிய முடியும். குற்றாலம், அதையடுத்து . . . .

30th September 1958]

MR. SPEAKER : The hon. Member may finish his speech soon, as there are still many more speakers.

SRI S. LAZAR : குற்றாலம் போன்ற இடங்களில் டவுன்ஷிப் கமிட்டி ஏற்படுத்தி இப்போது நடைமுறையில் இருந்து வருகின்றன. அவைகளிலே நாம் பார்க்கக்கூடிய சில கஷ்டங்கள், குறைகள் என்னவென்றால், அவைகளிலே அதிகப்படியான அளவுக்கு அதிகாரங்கள் இருக்கிறதே தவிர, பொதுமக்களின் பிரதிநிதிகள் இல்லை. அதனால் அதன் வாயிலாக ஏற்பட வேண்டிய வசதிகள் ஏற்படவில்லை. இப்போது இந்தச் சட்டத்திலே நல்ல முறையில் வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள். அந்த முறையில் நாம் பாராட்டத்தான் வேண்டும். ஆகவே, இந்த பஞ்சாயத்து கவுன்சில், டிஸ்ட்ரிக்ட் டெவலெப்மெண்ட் கவுன்ஸில் போன்ற முறைகளை வகுத்துக் கொடுத்திருப்பது, உள்ளபடியே நல்ல ஒரு ஸ்தல சர்க்கார் ஏற்படுவதற்கு வழி வகை செய்யும். ஆகையால் இந்தச் சட்டத்தை ஒவ்வொரு இடமாக வரிசைக் கிரமத்தில் எடுத்துக் கூடியசக்கரத்தில் நிறைவேற்றவேண்டும் என்று சொல்லிக்கொண்டு, இத்தகைய ஒரு மசோதாவைக் கொண்டு வந்த சர்க்காரைப் பாராட்டி, எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER : Before we proceed further, I have to make an announcement. The Business Advisory Committee which met to-day has decided that the Tiruchirappalli Kaiaeruvaram and Mattuvaram Bill, 1958, will be taken up for consideration at the next sitting of the Assembly which is likely to be held towards the end of October 1958. Now we have got one more Bill, viz., the Madras Public Health (Amendment) Bill, 1958. I hope it will take half an hour or a little more.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, half an hour will do.

MR. SPEAKER : I suppose the Hon. Minister will take 15 minutes for reply to the discussion on the third reading of the Panchayats Bill. I request hon. Members to be brief in their speeches as I have to call the Hon. Minister at 12-15 p.m.

We must have 45 minutes for the Madras Public Health (Amendment) Bill, 1958. I, therefore, appeal to the members to take as short a time as possible.

* SRI T. SAMPATH : சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவானது சட்டமாகும் தருணத்திலே எனது மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் நிதி அமைச்சர் அவர்களுக்கும், ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களுக்கும் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த மசோதா மீது மூன்று நாட்கள் பொது விவாதம் நடந்தது. பொது விவாதத்தின்போது பல அங்கத்தினர்கள் பல உயர்ந்த கருத்துக்களைத் தெரிவித்தார்கள். அடுத்தபடியாக பிரிவுகளின் பேரில் நான்கு நாட்கள் விவாதம் நடந்தது. அதிலும் நல்ல கருத்துக்களைத் தெரிவித்தார்கள். கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள் தெரிவித்த மாதிரி திருத்தங்கள் 300-க்கு மேல் வந்தன. சர்க்கார் சார்பிலேயும் 84-க்கு மேற்பட்ட திருத்தங்கள் வந்தன. இவைகளுக்கெல்லாம் காரணம் என்ன என்று நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். ஒரே ஒரு காரணம் தான். அதாவது, நீண்ட காலமாக நாம் எதிர் பார்த்துக்கொண்டிருந்த இந்த கிராம சுயராஜ்ய முறையானது நல்லதாக அமையவேண்டும், இது ஒரு நல்ல சட்டமாக உருவாகவேண்டும் என்ற ஒரே காரணத்தினால்தான்

11-50 a.m. அங்கத்தினர்கள் எல்லோரும் ஊக்கமாகத் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவித்தார்கள். உண்மையிலே இந்த மசோதாவானது நல்ல சட்டமாகத் தான் உருவாகியிருக்கிறது.

மேலும், நாம் எதிர்பார்த்த நல்ல பலன் கிடைக்குமென்றும் நான் எண்ணுகிறேன். இந்த மசோதாவிலே பல நல்ல அம்சங்கள் இருக்கின்றன. இந்த மசோதா சட்டமானவுடன், பெரிய ஸ்தாபனமாக இருந்த ஜில்லா போர்டுகள் எல்லாம் கலைக்கப்பட்டு, அந்த ஜில்லா போர்டுகளின் ஸ்தானத்திலே சிறு ஸ்தாபனங்களாகிய பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் அமைக்கப்பட விருக்கின்றன. ஜில்லா போர்டு பெரிய ஸ்தாபனமாக இருந்த காரணத்தினால், சரியான முறையிலே செயல் புரிய முடியவில்லை. ஆனால் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் புதிய அமைப்பிலே சிறிய ஸ்தாபனமாக அமைக்கப்படுவதன் காரணமாக, இந்த ஸ்தாபனங்கள் நல்ல முறையில் சேவை செய்யும் என்று எதிர்பார்க்கிறேன். ஜில்லா போர்டுகள் ஏற்கனவே செய்துவந்த வேலைகளிலே, ஹை ஸ்கூல்கள், ஆஸ்பத்திரிகள், பெரிய ரஸ்தாக்கள், இது போன்ற பெரிய நிர்வாக பொறுப்புகள் நீங்கலாக, மற்ற பெரிய பொறுப்புகள் எல்லாம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கு பெரிய இரு பொறுப்புகளை நாம் இப்பொழுது ஒப்படைத்திருக்கிறோம். ஆரம்பக் கல்வி ஒன்று; இரண்டாவதாக தேசிய நல விஸ்தரிப்புத் திட்ட வேலை; ஆக இரு பொறுப்புகளையும் இந்த ஸ்தாபனங்கள் ஏற்று நல்ல முறையில் பணி புரியும் என்று எண்ணுகிறேன். பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் நல்ல முறையில் இப்பொழுது நிதி வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. முன்பு ஜில்லா போர்டுகளிலே நிதி வசதி குறைவாக இருந்ததின் காரணமாக நல்லமுறையில் ஜில்லா போர்டுகள் செயல் புரிய முடியவில்லை. இப்போதும் அந்தக் குறை இருந்துகொண்டுதான் இருக்கிறது. இந்த மசோதாவிலே, பல இனங்களின் கீழ் பஞ்சாயத்துகள் மக்களிடமிருந்து எவ்வளவு பணம் வசூலிக்கிறதோ, அதற்குச் சமமான தொகையை அரசாங்கம் மானியமாகக் கொடுக்கவேண்டுமென்ற பிரிவு இருக்கிறது. இவ்வாறு "Matching grant" கொடுப்பது ஒரு நல்ல அம்சமாகும். இந்தப் பொறுப்பை ஏற்று நல்ல முறையில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் செயல் புரியவேண்டும். தவிர, கல்வி செஸ், மற்றும் இதர செஸ்களை வசூலிக்கும் அதிகாரம் இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அபிவிருத்தி வேலைகளிலே கிராம மக்கள் ஆர்வமாக செயல்புரிய முன்வர வேண்டுமென்ற நோக்கத்தோடு சில பிரிவுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் ஒரே ஒரு விஷயத்தை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். நல்ல முறையில் கிராமங்கள் முன்னேற்றம் அடையவேண்டுமென்ற நோக்கத்தோடு பஞ்சாயத்துகள் கிராம மக்களிடம் பணம் வசூல் செய்ய அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இதன் காரணமாக கிராம மக்கள் மீது அதிக வரிப்பளுவை பஞ்சாயத்துகள் சுமத்தாமலிருக்கும்படி சர்க்கார் பார்த்துக் கொள்ளவேண்டும்.

இன்னொரு விஷயத்தையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் அமைக்கப்படுவதன் காரணமாக, இப்பொழுது இருக்கக்கூடிய பஞ்சாயத்துகளின் முக்கியத்துவம் குறையவே கூடாது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலினுடைய ஆதிக்கம் இந்த பஞ்சாயத்துகளின் பேரில் அதிகமாக செலுத்தப்படாத முறையில் சர்க்கார் பார்த்துக்கொள்ளவேண்டும்.

MR. SPEAKER : The hon. Member must not take the whole of the time. He must give a chance to others also.

* SRI T. SAMPATH : இப்பொழுது பஞ்சாயத்துகளிலே சண்டைகள், பூசல்கள் இருந்து வருகின்றன. இனிமேல் அவைகள் நீடித்து இருப்பது சரியல்ல. இதன் காரணமாகத்தான் பிரிட்டிஷார் காலத்தில் "Decentralisation"—ஐ ஒப்புக்கொள்ளவில்லை. "Factions" இருக்கிற காரணத்தினாலே அதிகாரத்தைக் கொடுக்க மறுத்

30th September 1958] [Sri T. Sampath]

தார்கள். பஞ்சாயத்திலே சேவை செய்யக்கூடிய அங்கத்தினர்களும், பஞ்சாயத்து யூனியனிலே சேவை செய்யக்கூடிய அங்கத்தினர்களும் பரந்த நோக்குடன் பொதுநலம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு சேவை புரிய முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கனம் கோவிந்தசாமி அவர்கள், குறிப்பிட்டபடி இந்த மசோதாவிலே 40 பிரிவுகளுக்கு விதிகளை நல்ல முறையிலே அமைத்தாகவேண்டும். இந்த மசோதாவிலுள்ள பிரிவுகளுக்கு விதிகள் மூலமாகத்தான் விளக்கம் கொடுக்க வேண்டியிருப்பதன் காரணமாக, இந்த விதிகளை நல்ல முறையில் அரசாங்கம் அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, கனம் அமைச்சர் அவர்களுக்கு மீண்டும் எனது பாராட்டுதலைத் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : இன்னும் 20 நிமிஷம் இருக்கிறது. 12–15-க்கு கனம் வி. கே. ராமசுவாமி முதலியார் பேசுவார்கள். 12–30-க்கு மந்திரி அவர்கள் பேசுவார்கள். ஆகவே இன்னும் 4 அங்கத்தினர்கள், 5 நிமிஷம் வீதம் எடுத்துக்கொண்டு பேசலாம்.

**Sri K. R. NALLASIVAM** : கனம் சபாநாயகர் அவர்களே, ஸ்தல ஸ்தாபன அமைப்பிலே புதிய மாறுதலைக் கொண்டுவரக் கூடிய வகையிலே இந்த சட்டம் அமைந்திருக்கிறது. பொதுவாக, கிராம மக்களுக்கும், கிராம பஞ்சாயத்துகளுக்கும் அதிகாரம் கொடுக்கவேண்டு மென்று சொல்லக்கூடிய நேரத்தில் இந்த மசோதா சட்டமாகிறது. நான் சர்க்காருடைய கவனத்திற்குச் சில விஷயங்களைக் கொண்டுவர விரும்பு கிறேன். அடிப்படையான இந்த மாறுதலே, ஜனங்களுக்கு இன்னும் அதிகாரம் கொடுக்கக்கூடிய அளவுக்கு, அமல் நடத்தவேண்டும். இரண்டாவ தாக, இந்த மசோதா சட்டமானவுடன், எல்லாம் அது மாதிரியே நடக்க வேண்டுமென்று இல்லாமல், ஒரு சோதனையாகக் கருதி இதை அமல் நடத்தவேண்டும். இந்த பஞ்சாயத்து சீரமைப்பு விஷயம் ஏற்கனவே இந்தச் சபையில் விவாதிக்கப்பட்டது. பின்னர் பொறுக்குக் கமிட்டியிலே நல்ல முறையில் இந்த மசோதா பரிசீலிக்கப்பட்டது. சட்டசபைக்கு இந்த மசோதா வந்த பின்னரும்கூட பல திருத்தங்களைச் சேர்த்து, இந்தச் சட்டத்தை நிறைவேற்றுகிறோம். இந்தச் சட்டத்தை அமல் செய்யும் பொழுது கஷ்டங்கள் ஏற்பட்டால், அவைகளை நிவர்த்திக்க மேலும் திருத்தங்கள் செய்யவேண்டி இருந்தால், அவைகளைச் செய்வதில் தாமதம் ஏற்படக்கூடாது.

இன்றைக்கு பிளாக் அடிப்படையிலே பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலை அமைத்துவிட்டோம். அந்தந்தப் பிராந்தியத்திலுள்ள அபிவிருத்தி வேலைகளைப் பொறுத்தவரையில், அந்தந்த பஞ்சாயத்து யூனியன் கவுன் சில்கள் கவனித்துக்கொள்ளவேண்டுமென்ற முறையில், இவைகளுக்குப் பணம் ஒதுக்கிக் கொடுக்கவேண்டும். இதை நான் ஏன் சொல்லுகிறேன் என்றால், முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே ஒதுக்கப்பட்ட அளவுக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே பணம் ஒதுக்கப்படவில்லை. ஏராள மான பிளாக்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகளுக்கு ஒதுக்கப்படும் தொகை குறைந்து கொண்டே வருகிறது. இந்தப் பஞ்சாயத்து யூனியன் மூலமாக "நீங்கள் ஏராளமாக வரி போடப் போகிறீர்கள், அதை வைத்துக்கொண்டு நீங்களே கிராம அபிவிருத்தி வேலைகளைச் செய்து கொள்ளுங்கள்" என்று சர்க்கார் சொல்லி விடுவார்களோ என்று பயமாக இருக்கிறது. இன்றைக்கும் கூட கிராம பஞ்சாயத்துகளுக்கு வரி வசூல் மூலம் அதிக வருமானம் கிடைக்கவில்லை. மக்களுடைய அபிவிருத்திக் காக இவை அமைக்கப்படுகின்றன என்று சொல்லிவிட்டு, அவைகளை வெறும் பேசும் ஸ்தாபனமாக்கி விடக்கூடாது. இந்தப் பஞ்சாயத்து யூனி யன்கள் நல்ல முறையில் செயல்படும்படி, கிராம அபிவிருத்தி வேலை களுக்காக சர்க்கார் தொகை ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

*SRI R. KRISHNASAMI REDDIAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தப் பஞ்சாயத்து மசோதாவைக் கொண்டுவந்து நிறை வேற்றி வைத்த சர்க்காரைப் பாராட்டும் வகையில் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன்.

நமது மகாத்மா காந்தி அவர்கள் எதிர்பார்த்த ராமராஜ்யம், கிராம ராஜ்யம், இவற்றின் வித்து இந்த மசோதாவிலே அடங்கி இருக்கிறது. அதுமட்டுமல்ல. நம்முடைய அரசியல் சட்டத்தில் இருப்பது போல, கிராம ராஜ்யமாக்கவேண்டும், அதிகாரம் பரவலாக்கப்பட்டு கிராம மக்களிடத் திலே கொடுக்கப்படவேண்டும் என்ற அடிப்படை தத்துவம் இந்த மசோதா விலே அடங்கியிருக்கிறது.

12 noon. அதற்கு அடுத்தபடியாக, இந்த பாரத தேசத்திலே முதல் முதலாக இப்பேற்பட்ட மசோதாவைக் கொண்டுவந்த பெறுமை நமது சர்க்காருக்கு ஏற்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல. கிராம மக்கள் வெகு உற்சாகத்துடன் தினந்தோறும் இந்த மசோதாவின் பேரில் சட்ட சபையிலே நடக்கின்ற நிகழ்ச்சிகளை கவனிக்கின்ற அளவுக்கு இந்த மசோதா அமைந்திருக்கிறது. இந்த மசோதாவின் பேரில் கிராம மக்களுக்கு இருக்கின்ற உற்சாகம் வேறு எந்த மசோதாவின் பேரிலும் இருந்ததில்லை என்பதை நான் துணிவுடன் சொல்லுவேன். இந்தப் பஞ்சாயத்து மசோதா பிரசுரம் செய்யப்பட்டதிலி ருந்து கிராம மக்களிடத்தில் புது உணர்ச்சியும், புது உற்சாகமும் ஏற் பட்டிருக்கிறது. "அரசாங்கம் அதிகாரங்களை நமக்கு பிரித்துக் கொடுக்கப் போகிறது. அதன் மூலம் கிராம ராஜ்யம் அமையப் போகிறது, அதன் மூலம் நாம் சுயதேவையை பூர்த்தி செய்துகொள்ள முடியும், நமக்கு வேண்டியதை நாமே செய்துகொள்ளுவோம்" என்ற அடிப்படை உணர்ச்சி கிராம மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. ஆங்காங்கு நடந்த பஞ்சாயத்துத் தேர்தல்களைப் பார்த்தாலே இந்த உண்மை நிதர்சனமாகும். இம்மாதிரி பஞ்சாயத்து தேர்தல்களில் கிராம மக்களுக்கு ஒரு புத்துணர்ச்சியும், ஆர்வ மும் ஏற்பட்டதற்கு பஞ்சாயத்து மசோதாவின் அடிப்படைதான் காரணமே தவிர, வேறு ஒன்றுமில்லை. இந்த பஞ்சாயத்து மசோதா கொண்டுவரப் படாமல் இருந்தால், பஞ்சாயத்து தேர்தல்களில் மக்களுக்கு உணர்ச்சியும், ஆர்வமும் இந்த அளவுக்கு வந்திருக்கவே முடியாது.

கனம் அங்கத்தினர்கள் சிலர் பேசும்பொழுது, குறைந்த வருமானம் உள்ள குடிசை வாழ்வோருக்கும், மற்றவர்களுக்கும் வரியே இல்லாமல் இருக்க வேண்டும் என்று கூட சொன்னார்கள். கிராமத்திலே நெருங்கிப் பழகியவர்கள் அதை ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இன்று கிராமத்தில் நடக்கும் ஒரு சிறு திருவிழாவுக்குப் பணம் வசூல் செய்யும்பொழுது ஒரு சிறு குடிசையில் இருப்பவரை ஏழை என்று சொல்லி நீக்கிவிட்டு, அவ ரிடம் பணம் வாங்காவிட்டால் அவருக்குக் கோபம் வந்துவிடும். கிராமத்தில் நடக்கும் ஒவ்வொரு நல்ல காரியத்திலும் தாங்களும் அதில் சேர்ந்து கொண்டு மற்றவர்களோடு ஒன்றாக இயங்கவேண்டும் என்ற எண்ணம் தான் கிராமத்தில் வசிக்கக்கூடிய குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கும் ஏற் படுமே தவிர, அதிலிருந்து ஒதுங்கி மற்றவர்கள் செலவு செய்து அதன் மூலம் அவர்களும் அந்த உற்சாகத்தில், திருவிழாவில் கலந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏற்படாது. ஒரு ஊரில் ஒருவரைப் பிடிக்க வில்லை என்றால், திருவிழாவுக்கு ஒரு வீட்டிற்கு 8 அணா வரி வசூலிக்கும் பொழுது அவரிடமிருந்து அந்த வரியை வசூலிக்கவேண்டாம் என்று சொல்லிவிடுவார்கள். அதனால் தன்னுடைய அந்தஸ்து குறைந்துவிட்ட தாகவும், கிராமத்திலிருந்து தன்னை புறம்பாக்கிவிட்டதாகவும் அவர் கருது வார். வருமானம் எப்படியிருந்தாலும், ஏதோ ஒவ்வொருவரும் ஒரு சிறு தொகை கொடுக்கவேண்டுமென்ற அடிப்படை ஆதாரத்தை உணர்ந்த அமைச்சர், கிராமத்தை நன்றாக உணர்ந்த அமைச்சர், அதற்கேற்றபடி இந்த மசோதாவைக் கொண்டு வந்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

குறிப்பாக, இந்தப் பஞ்சாயத்து சட்டத்தின் மூலம் கல்வி அபிவிருத்தி கணிசமான அளவு முன்னேறுவதற்குத் தகுந்த சூழ்நிலை இருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அத்துடன் மட்டுமல்லாமல் இந்த

30th September 1958] [Sri R. Krishnasami Reddiar]

தேசத்திலே பாதி எண்ணிக்கை உள்ள மாதர்களின் சார்பாக இன்றைய தினம் அமைச்சராக இருக்கும் நமது ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் காலத்தில், அவர் பெயரால் இந்த மசோதா நிறைவேற்றப்படுவது பாராட்டக்கூடியதும், வரவேற்கக்கூடியதும் ஆகும். இம்மாதிரி ஒரு நல்ல மசோதாவைக் கொண்டுவந்து நமது மாநில மக்களுக்கு நல்ல ஒரு அரசியல் உணர்வையும், ஊக்கத்தையும் கொடுத்து, அதன் மூலம் அதிகாரத்தையும் பரவலாகச் செய்து, சுயதேவையை பூர்த்தி செய்துகொள்ள வாய்ப்பு கொடுத்து, காந்திஜியின் அபிலாஷையை பூர்த்தி செய்து, அரசியல் சட்டத்தினுடைய ஷரத்துகளை அமுலாக்குவதற்கு ஆதாரமாக அமையும்படிச் செய்ததற்காக நமது மாநில சர்க்காருக்கு எனது தொகுதி மக்கள் சார்பாக என்னுடைய பாராட்டுதலை தெரிவித்துக்கொண்டு, இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்து மசோதா சட்டமாக நிறைவேறக்கூடிய இந்த நேரத்திலே, அதன் பேரில் என்னுடைய ஓரிரண்டு அபிப்பிராயங்களை சொல்ல ஆசைப்படுகிறேன். நாம் எதிர்பார்த்த அளவுக்கு, அல்லது மகாத்மா காந்தி அவர்கள் கண்ட கனவின் அடிப்படையிலே முழுக்க முழுக்க அப்படியே இந்த மசோதாவை கொண்டுவர முடியவில்லை என்று சொன்னாலும், ஏதோ இந்தக் காலத்திலாவது ஆரம்பப்படியாக ஓரளவு கிராமத்திலுள்ள பஞ்சாயத்து போர்டுகளுக்கு விட்டுக்கொடுக்கக்கூடிய தன்மையிலே இந்த பஞ்சாயத்து மசோதா அமைந்திருக்கிறது என்ற அடிப்படையிலே நான் அதை வரவேற்கிறேன். என்றாலும், இந்த மசோதாவின் அடிப்படையிலே நடைபெறக்கூடிய தேர்தல்கள் எப்படி நடத்தப்படவேண்டும், அதற்காக வேண்டி விதிகள் எப்படி திருத்தி அமைக்கப்படவேண்டுமென்பதுபற்றி, நான் ஏற்கனவே தெரிவித்திருந்தபோதிலும், மீண்டும் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தேர்தல் நடக்கக்கூடிய காலத்தில், இன்றைக்கு "நாமினேஷன்" எழுதிப்போட்டுவிட்டு அடுத்த நாள் கைதூக்கும் அதே முறை தான் இன்றைக்கும் இருக்கிறது. இன்றைக்கு "நாமினேஷன்" வாங்கிக்கொண்டு அடுத்த நாள் தேர்தல் நடக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. இரவிலே தான் வோட்டர்களை நாடக்கூடிய நிலைமை இருப்பதனால், அந்த நிலைமையை மாற்றி அமைக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். குறைந்தபட்சம் "நாமினேஷன்" எழுதிப் போட்டபிறகு 10, 15 தினங்களாவது அவகாசம் இருக்கவேண்டும். அதே போன்று இன்றைக்கு இருக்கக்கூடிய வோட்டு முறையையும் மாற்றவேண்டும். 5 பேர்களைக் கொண்ட ஒரு வார்டு இருந்தால், ஒரு வோட்டருக்கு 5 வோட்டுகள் இருந்தால், அதை அவர் ஒரே அபேட்சகருக்கு போட்டால், ஐந்து வோட்டுகளும் செல்லுபடியாகக்கூடிய நிலைமை இருக்கிறது. அந்த முறை ரத்து செய்யப்படவேண்டும். அத்தனை வோட்டுகளையும் ஒரே அபேட்சகருக்கே கொடுப்பது என்று சொன்னால், அதில் ஒரு வோட்டுதான் செல்லுபடியாகவேண்டும், மற்ற வோட்டுகள் செல்லுபடியாகக்கூடாது என்ற முறையில் இருக்கவேண்டும்.

அடுத்தபடியாக, வோட்டுச் சீட்டுகள் நல்ல முறையில் இல்லாததால் பல ஊழல்களும், சங்கடங்களும் கண்டிப்பாக ஏற்படுகின்றன. வோட்டுச் சீட்டுகள் சர்க்கார் சின்னத்தோடு நல்ல முறையில் அச்சிடப்படவேண்டும்.

பஞ்சாயத்து போர்டுகளின்கீழ் வரக்கூடிய பல கிராமங்கள் இன்று மோசமான நிலைமையில் இருக்கின்றன. ரெவின்யூ கிராமம் ஒன்று இருக்கிறது என்று சொன்னால், அந்தக் கிராமத்தை 2 பிரிவுகளாக, 3 பிரிவுகளாக பிரித்து மற்ற கிராமத்தோடு சேர்த்து, அந்த அடிப்படையிலே பஞ்சாயத்து போர்டு அமைக்கக்கூடிய நிலைமை இன்றைக்கு இருப்பதன் காரணமாக, பல் குழப்பங்கள் ஏற்படுகின்றன. ஒரு ரெவின்யூ கிராமம் இருக்கிறது என்று சொன்னால் முழுக்க முழுக்க அந்த ரெவின்யூ கிராமத்தை ஒரு குறிப்பிட்ட பஞ்சாயத்து போர்டில் சேர்க்கவேண்டும். வார்டுகள் பிரிப்பதிலும், தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் பகுதிகளை பிரிப்பது, மைனாரிடியாக உள்ள முஸ்லிம் மக்கள் போன்றவர்கள் வாழும் பகுதிகளை பிரிப்பது, இவர்கள் வாழும்

பகுதிகளைப் பிரித்து வேறு வார்டில் சேர்ப்பது, மாற்றி அமைப்பது, தொழிலாளர்கள் வாழும் பகுதியைப் பிளவு படுத்துவது, இதுபோன்ற ஒரு நிலைமை இருக்கிற காரணத்தினாலே இம்மாதிரி மக்கள் தேர்தலில் வெற்றி பெற்று வரமுடியவில்லை. இதிலே கவனம் செலுத்தவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு வார்டிலும் வோட்டு முறை ஒரே மாதிரியாக இருக்கவேண்டும். ஒரு வார்டுக்கு 100, இன்னொரு வார்டுக்கு 200, இன்னொரு வார்டுக்கு 300 என்று இம்மாதிரி ஏற்றத்தாழ்வு, பாகுபாடுகள் இருக்கக்கூடாது. இதையெல்லாம் அரசாங்கம் கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பஞ்சாயத்துத் தேர்தல் நடைபெறுகிறது என்று சொன்னால், இன்றைய தினம் "நாமினேஷன் பாரம்" வாங்கி, பணத்தையும் வாங்கிக்கொண்டு, பரிசீலனை செய்யப்பட்ட பிறகு, திடீரென்று அடுத்த நாள் தேர்தல் கிடையாது என்கின்ற போக்கு இப்பொழுது இருக்கிறது. இதையெல்லாம் நல்ல முறையில் கண்காணிக்கவேண்டும். பஞ்சாயத்து போர்டு தேர்தல் நடக்கும் பொழுது போலீஸ் உதவியைக்கொண்டு தேர்தலிலே அபேட்சகர்கள் நிற்கக்கூடிய நிலைமையும் இருக்கிறது. இதனால் தேர்தலிலே மக்கள் சரியான முறையிலே பங்கு எடுத்துக்கொள்ள முடியவில்லை. இந்த நிலைமைகளையெல்லாம் அரசாங்கம் நன்றாகக் கண்காணிக்க வேண்டும். இந்த மசோதாவை நிறைவேற்றுவதுபற்றி பெருமையோடு பேசக்கூடிய இந்தச் சந்தர்ப்பத்தில் இவைகளையெல்லாம் கவனித்தால்தான் இந்தச் சட்டத்திற்கு மதிப்பு கொடுப்பதாகும், ஜனநாயகத்திற்கு மதிப்பு கொடுப்பதாகும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஜில்லா போர்டில் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகளை பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களில் வேலைக்கு எடுத்துக்கொள்ளுவது சம்பந்தமாக "மே கன் ஸிடர் ஸூடபிள்", அதாவது விரும்பினால் ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவிற்கு நிலைமை இருக்கிறதே தவிர, அந்தச் சிப்பந்திகள் கண்டிப்பாக வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படுவார்கள் என்ற உத்திரவாதம் உண்டு என்ற அடிப்படையில் அது அமையவில்லை. ஏற்கனவே இருந்ததைவிட இன்னும் கொஞ்சம் மோசமான முறையில்தான் இது அமைக்கப்பட்டிருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே, ஜில்லா போர்டுகளில் வேலை செய்யக்கூடிய சிப்பந்திகள். . .

**(At this stage the Hon. Speaker rang the bell and stood up. Sri V. K. Kothandaraman was still standing.)**

**Mr. SPEAKER : When the Speaker is on his legs, all hon. Members should sit. Sri T. R. Ramamirtha Thondaman will now speak.**

2-10 p.m. *Sri **T. R. RAMAMIRTHA THONDAMAN** : கனம் தலைவர் அவர்களே, இந்தப் பஞ்சாயத்து மசோதாவைக் கொண்டுவந்ததற்காகச் சர்க்காரைப் பாராட்டுகிறேன் ; ஸ்தல ஸ்தாபன மந்திரியவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கிராமப் பஞ்சாயத்து என்பது சென்ற காலத்திலும் நம் நாட்டில் இருந்து வந்திருக்கிறது. பல இடங்களிலே "சமுதாயம்" என்ற பெயரில் கிராமங்களில் இருக்கின்றன என்பதையும் நினைவூட்டுகிறேன். இதிலிருந்தும் கிராமப் பஞ்சாயத்து சென்ற காலத்தில் நம் நாட்டில் நடைமுறையில் இருந்து இருக்கிறது என்பது விளங்குகிறது. ஆகவே கிராம சமுதாயங்களை இதில் சேர்க்கவேண்டும். மஹாத்மாஜியின் எண்ணப்படி எல்லா கிராமங்களிலும், சுய ஆட்சியை ஏற்படுத்தக்கூடிய நிலைமையை உண்டாக்குவதற்காக இந்தச் சட்டம் பயன்படுகிறது என்பதற்கு என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கிராமப் பஞ்சாயத்துக்கள் நல்ல முறையிலே அமையவேண்டுமென்று சர்க்கார் ஒரு திட்டத்தை கொண்டு வந்தார்கள். அது செலக்ட் கமிட்டியால் நன்கு பரிசீலனை செய்யப்பட்டு, உருவாக்கப்பட்டது. எதிர்க் கட்சி

யினர்களும் ஆளும் கட்சியினரும் பல திருத்தங்களைக் கொடுத்து, சில வற்றை அரசாங்கமும் ஏற்றுக்கொண்டு, சுமுகமாக இந்தச் சட்டம் நிறை வேறுகிறது. இந்தச் சட்டம் நல்ல முறையிலே அமுலாகி கிராம மக்களின் உணர்ச்சியை எழுப்பி அவர்கள் முன்னேற்றத்திற்கு ஒரு பெரும் எழுச்சி யாக அமையும் என்று நிச்சயமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பஞ்சாயத்து யூனியனில் கிராம அபிவிருத்தித் திட்டத்தை அமைத்து அதன் காரணமாக ஜில்லா போர்டுகள் எடுக்கப்பட்டு, ஷ அதிகாரங்கள் பூராவும் கிராம மக்களுக்கே என்ற முறையில் அவர்கள் பிரதிநிதிகளுக்கே கொடுக் கப்படுகின்றன என்பது அவர்களுக்கு ஒரு புதிய உணர்ச்சியைக் கொடுக்கும். முன்பெல்லாம், ஒரு ஜில்லா போர்டு தலைவர் இருந்தார்; அவர் ஊரில் தான், பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள்; ரோடுகள் இவைகள் அமைக்கப் படும். மற்ற இடங்கள் அவ்வளவாகக் கவனிக்கப்படமாட்டாது. அந்த நிலை மாறி, இந்த மாகாணத்து கிராமங்கள் அத்தனையின் தேவைகளும், வசதிகளும், மக்கள் தாங்களே செய்து கொள்ளக்கூடிய நிலைமையை இந்தச் சட்டத்தின் மூலம் ஏற்படுத்தியிருக்கிறார்கள் என்பதால், கிராமங்கள் முன் னேற நல்ல வாய்ப்பு இருக்கிறது.

நிதி நிலைமை சம்மந்தப்பட்ட வரையில், அங்கேயுள்ள சௌகரியங்க ளுக்கு தகுந்தாற்போல், அவர்களே சிறு நீர்ப்பாசன வசதிகள், வைத்திய வசதிகள், குடி தண்ணீர், கல்வி, சுகாதாரம் இவைகளைச் செய்துகொள்ளக் கூடிய முறையில் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். நிதி வசூல் கிராம அதிகாரிகளே செய்யவேண்டும் என்று போட்டிருக்கிறது. அதில் கிராம அதிகாரிகள் கடமையை வற்புறுத்தவேண்டும். காரணம் சென்ற காலத் தில், இந்த கிராம அதிகாரிகள் தங்கள் கடமையை உணர்ந்து நடக்காத தால், பல உத்தரவுகள் அலட்சியம் செய்யப்பட்டிருக்கின்றன. சர்க்கார் அடங்கலில் சாகுபடி செய்பவர்கள் பெயர், விஸ்தீர்ணம், எவ்வளவு மகசூல் என்ற விவரம் எழுதும்படி சர்க்கார் உத்தரவு இருந்தும் குறிப்பாக கிரா மங்களில் சாகுபடி செய்பவர்கள் பெயரை அடங்கலில் எழுதவில்லை. அம் மாதிரியில்லாமல், இந்த பஞ்சாயத்து விஷயத்தில், கிராம அதிகாரிகள் தங்கள் கடமையை உணர்ந்து நடக்க வேண்டும் என்றும், தவறினால் தகுந்த தண்டனை என்ற முறையில் விதிகளில் திட்டவட்டமாக விளக்கி அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது நன்றாக விதிகளில் வற்புறுத்தப்படவேண்டும். இதுவரை கிராமப் பஞ்சாயத்துகளில் குரூப் கிளார்க்காக வேலை செய்தவர்களுக்கு வேறு ஜில்லாக்களில் வேலை கொடுக் கும்வரை அவர்களே பஞ்சாயத்துகளில் இருக்க வசதியிருக்கவேண்டும் என்றும் வற்புறுத்துகிறேன்.

மேலும், "அதிகாரிகள் வேறு, மக்கள் வேறு" என்ற ரீதியில் தான் சென்ற காலத்தில் அதிகாரிகள் இயங்கி வந்திருக்கிறார்கள். சுதந்திரம் அடைந்த பிறகு, ஜனநாயகம் என்று சொல்லுகிறார்களே, அந்த முறையிலே அதிகார வர்க்கம் செயல்படுவதிலே சென்ற கால மனப்பான்மை மாறவேண்டும் என்று கூறிவந்தோம். இப்பொழுது ஏற் பட்டிருக்கும் சட்டத்தில், பஞ்சாயத்து யூனியனிலே, டெவலப்மெண்ட் கௌன் சிலிலே, பல அதிகாரிகள் போடப்பட்டிருக்கிறார்கள். விவசாய அபி விருத்தி அதிகாரி, கால்நடை அபிவிருத்தி அதிகாரி, நீர்ப்பாசன அபி விருத்தி அதிகாரி, கோ-ஆபரேடிவ் அதிகாரி, பஞ்சாயத்து ஆபீஸர் என் றெல்லாம் இருக்கிறார்கள். இவர்கள் தவிர இன்னும் கிராம சேவகர்கள்—ஆண்கள், பெண்கள் இருபாலரும்—இன்னும் சமுதாயநல நிர்வாக அதிகாரி என்றும் சமூக கல்வி அமைப்பாளர் என்றும் பலர் இருக்கிறார் கள். இவர்களெல்லோரும், தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாகஸ்தர்களோடும் கிராம மக்களோடும், தாங்கள் மக்களின் சேவகர்கள் என்ற பாணியில் வேலை செய்கிறார்கள். மேலும் அது வற்புறுத்தப்படவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்த மசோதாவைக் கொண்டு வந்ததற்காக நிதி அமைச்சர் அவர்களையும், ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களையும், சர்க்காரையும் மீண்டும், மீண்டும் பாராட்டி முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**SRI M. P. SUBRAMANIAM**: அவைத் தலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து மசோதா சட்டமாகும் தருவாயில், இதன் 198 பிரிவுகளின் மீது மீண்டும் பேசவேண்டிய அவசியமில்லை. ஆனால், பொதுவாகச்

சொல்ல வேண்டுமானால், இந்த மசோதாவை இன்னும் கொஞ்சம் அமைதியான முறையிலே, கொஞ்சம் காலம் கழித்து, மேலும் விவாதத்திற்கு இடமளித்துக் கொண்டு வந்திருக்கலாம் என்பது விவாதத்தில் நன்கு புலப்பட்டது. அரசாங்கம் கொண்டு வந்த 80-க்கு மேற்பட்ட திருத்தங்களிலிருந்து அரசாங்க தரப்பாளர்கள் கூட, கொஞ்சம் அமைதியாகச் செய்யாததால் பல கருத்துக்களை மாற்ற வேண்டிய நிலைமை இருக்கிறது என்று நினைப்பதைத்தான் தெளிவாக்குகிறது. இந்தப் பகுதியில் இருப்பவர்கள் கொடுத்த பல திருத்தங்களை அரசாங்கம் ஏற்றுக் கொள்ள இயலாமல் போய்விட்டது என்று தெரிவித்தார்கள். ஏற்கனவே ஒரு குழு நியமிக்கப்பட்டு அந்தக் குழு பரிசீலனைசெய்தது. சட்ட சபை விவாதத்தின் பல கருத்துக்களை பரிசீலிக்க, இன்னும் சற்று மெதுவான முறையிலே செய்திருக்கலாம்.

பஞ்சாயத்து மசோதா, சமுதாய நலத் திட்டங்களை செயல்படச் செய்ய என்ற நோக்கோடு கொண்டு வரப்படுகிறது. அது சீறிய நோக்கமேயானாலும், பஞ்சாயத்துக்கு அதிக அதிகாரத்தைக் கொடுக்கவில்லை. இந்த மசோதாவில் எந்த அளவில் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று பார்த்தால், அது அரை மனதாகத் தான் "Half hearted measure" ஆகத்தான் இருக்கிறது என்பதை சொல்லாமல் இருக்க முடியவில்லை. அந்த வகையில்தான் சட்டம் அமைந்திருக்கிறது. எத்தனையோ அதிகாரங்கள் அரசாங்கத்தின் கையில் வைக்கப்பட்டிருக்கிறது. எந்தக் காரியத்திலும், எந்த நேரத்தில் வேண்டுமானாலும், அதிகாரிகள் தலையிட இடமளிக்கிறது. அந்த வகையில்தான் சட்டம் அமைகிறது. பல நேரங்களில் பார்க்கிறோம், பல உயர் நீதி மன்றங்களிலே, சட்டத்தின் முக்கிய நோக்கத்திற்கு மாறாக அது அமல் நடத்தப்படுகிறது என்று அவர்கள் குறை கூறுவதை, பார்லிமெண்டரி டெமாக்ரஸி அமைப்பிலே சட்ட சபையோ. சர்க்காரோ எல்லா நுணுக்கமான விவகாரங்களையும் கவனிக்க முடியாது. ஆகவே, சட்டத்தை நிறைவேற்றிய பிறகு, விதிகள் மூலம் அவைகள் அமலாக்கப் படுகின்றன. சட்டத்தை நல்ல நோக்கத்தோடு கொண்டு வந்திருக்கலாம். ஆனால், விதிகள் அந்த நோக்கத்தையே மாற்றிவிட முடியும். ஆகவே, எந்த வகையில் அதிகாரம் செயல்படுகிறது என்பதைப் பொருத்துத்தான், ஒரு சட்டத்தின் தாரதம்மியத்தைச் சொல்ல முடியும். விதிகள் பல சிக்கல்களையும், கஷ்டங்களையும், உண்டாக்காமல் இருக்கவேண்டும். சர்வ ரோக நிவாரணி யென்று சொல்லப்படும் இந்த சமுதாய நலத் திட்டத்தை இந்த பஞ்சாயத்து கௌன்சில் மூலமாகவே செயல் படுத்துவது என்கிற நோக்கம் நல்லதுதான். ஆனால் அது எந்த வகையில் செயல் படுத்த படுகிறது என்பதை, நோக்கம் எவ்வளவு தூரம் நன்மை அல்லது தீமை பயக்கிறது என்பதை, இருந்துதான் பார்க்கவேண்டும். பொதுவாக அரசாங்கத்துக்குக் குறைந்த அதிகாரம் இருப்பதே நல்லது.

ஏற்கனவே, கனம் அமைச்சர் அவர்கள் கூறியது போல், ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை இதன் விளைவுகளைப் பரிசீலனை செய்யலாம், புனராலோசனை செய்யலாம் என்றாலும், அதை ஐந்தாண்டுகள் என்றில்லாமல், இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை என்று வைத்தால் நலமாக இருக்கும். முக்கியமாக பள்ளிக்கூடங்கள் போன்றவைகள் செயல் படும் நிலை அடிக்கடி பரிசீலிக்க வேண்டியவை. இந்த அவையில் பொது பட்ஜட் விவாதத்தின்போது விவாதிக்கலாம் என்றாலும், சிறிய குழுக்களை அமைத்து—அதற்கென்று தனியாக அமைத்து—இரண்டாண்டுகளுக்கு ஒரு முறையாவது புனராலோசனை செய்யும் வாய்ப்பு இருக்கவேண்டும்.

12-20 p.m. * **SRI V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த பஞ்சாயத்து மசோதாவானது இப்பொழுது சட்டமாக வரப்போகிறது. எல்லா கட்சிகளையும் சேர்ந்த ஒரு பொறுக்குக் கமிட்டி போட்டு அதை நன்கு பரிசீலனை செய்து, இந்த சட்டசபையின் முன்பாக வந்து விவாதிக்கப்பட்டு சட்டமாகும் தருணத்தில் இருக்கிறது. பொறுக்குக் கமிட்டியில் எல்லா கட்சிகளையும் சேர்ந்த நல்ல அனுபவம் உள்ளவர்கள் அனைவரும் இருந்து ஒவ்வொரு பிரிவையும் சரிவரப் பரிசீலனை

செய்து தீர்க்க ஆலோசனையும் செய்தார்கள். அவர்களுடன் கூட இந்த இலாகாவைச் சேர்ந்த செக்ரடரியும் மற்ற அனுபவம் உள்ளவர்களும் சேர்ந்துதான் இதை நன்றாகப் பரிசீலனை செய்தார்கள். இதனுடைய முக்கியமான அம்சங்கள் என்னவென்றால் ஜில்லா போர்டு ரத்து செய்யப் பட்டு, 1950-ம் வருஷத்திய பஞ்சாயத்து மசோதாவும் ரத்து செய்யப்பட்டு இப்பொழுது **comprehensive**—ஆக ஒரு புதிய பஞ்சாயத்து மசோதாவாக இப்பொழுது நிறைவேறப்போகிறது.

ஜில்லா போர்டு இருந்த காலத்திலேயே அவைகளின் பொருளாதார நிலைமை சரிவர இல்லாத காரணத்தால் பஞ்சாயத்துகளுக்கு வேண்டிய நிதிகளையெல்லாம் அவர்கள் சரிவரக் கொடுக்காமல், பஞ்சாயத்துகளுடன் ஜில்லா போர்டுகளுக்கு சரிவரத் தொடர்பு இல்லாத காரணத்தால் பஞ்சாயத்துகள் நடைபெற்ற இடங்களில் அவைகள் நன்றாகத் தங்களுடைய பணிகளைச் செய்யவில்லை என்பதை யாரும் மறுக்க முடியாது. முக்கியமாக பஞ்சாயத்துகளுக்கு போதுமான பணவசதி கிடையாது. அதைத்தவிர, இப்பொழுது நம் மாகாணத்தில் 7,000 பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. இன்னும் அநேக பஞ்சாயத்துகள் வரப்போகின்றன. தவிர அநேகம் இடங்களில் அநேகருக்கு அனுபவம் இல்லாத காரணத்தால் சில பஞ் சாயத்துகள் நன்றாக நிர்வகிக்கப்படவில்லை. இப்பொழுது ஜில்லா போர்டுகளை எடுத்ததன் காரணமாக பஞ்சாத்து யூனியன் கவுன்சில்களை ஒவ்வொரு ப்ளாக் ஏரியாவிலும் அமைத்து அதன் மூலமாக பஞ்சாயத்துக்களை மேல் பார்வை செய்து இன்னும் அவைகள் நல்ல முறையில் பணியாற்ற வேண்டிய விஷயங்களையும் அதற்கு வேண்டிய சில விதிகளையும் ஏற்படுத்தி இந்த பஞ்சாயத்துகள் எல்லாம் நல்ல முறையில் நடக்கவேண்டும் என்பதைப் பற்றி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. சில கருத்துக்களையும் சில பாகுபாடு களையும் சிலர் கூறினார்கள். பஞ்சாயத்துகளுக்கும் சரி, பஞ்சாயத்து யூனியன்களுக்கும் சரி போதுமான அதிகாரம் கொடுக்கப்படவில்லை என்பதைப்பற்றி சிலர் விவாதித்தார்கள். அதைப்பற்றியும் நன்றாகப் பரிசீலனை செய்யப்பட்டது. ஆனால் அவர்களுக்கு அதிகாரங்களைக் கொடுக்கக்கூடாது என்ற எண்ணம் ஒருவரிடத்திலும் இல்லை.

இப்பொழுது ஆரம்பத்தில் ஜில்லா போர்டுகளை எடுத்துவிட்டு சிறிய சிறிய யூனியன்களாகப் பிரித்து அவைகளுக்கு அதிகாரங்களைக் கொடுக்கப் போகிறோம். அவைகளை நிர்வகிக்க வரக்கூடியவர்களில் சிலருக்கு நல்ல அனுபவம் இருக்காது. சட்டங்களைப் புரிந்துகொண்டு பணியாற்றுவதற்கு கொஞ்சம் நாளாகும். போகப்போக அவர்களுக்குப் பழக்கம் ஏற்பட்டு, ஸ்தல ஸ்தாபன நிர்வாக முறைகள் என்ன என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு அதன் பிறகு அவர்களுக்குத் தேவையான அதிகாரங்களை யெல்லாம் பூரணமாகக் கொடுக்கலாம்; அது வரைக்கும் தாற்காலிக மாக பஞ்சாயத்து டெவலப்மெண்ட் ப்ளாக்குகளில் டெவலப்மெண்ட் ஆபீசர், கமிஷனர் போன்ற சில உத்யோகஸ்தர்கள் இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் வேலைகளை நிர்வகித்துவரலாம் என்ற சில விதிகளை ஏற்படுத்தியுள்ளோம். இந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலமாக கிராமங்களுக்கு அநேக நல்ல வேலைகளைச் செய்வதற்கு நல்ல வாய்ப்பு ஏற்படும். அப்படி இருக்கும்போது அவர்களுக்கு முக்கியமாக ஒன்றை நாங்கள் (பொறுக்கு கமிட்டியார்) செய்வதற்கு முடியாமல் போய்விட்டது. முக்கிய மாக ஜில்லா போர்டின் கீழ் இருந்த ஹைஸ்கூல்களை எல்லாம் அவர் கள் மேல்பார்வைக்கு செய்ய வேண்டிய அதிகாரங்களை நாங்கள் (பொறுக்கு கமிட்டியார்) கொடுக்கவில்லை. அதற்காக இப்பொழுது சர்க் காரில் என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்றால் அதற்கு ஒரு தனிக் கமிட்டி போட்டு அந்த உயர்தர பாடசாலைகளை யெல்லாம், எப்படி நல்ல முறையில் நடத்தலாம் என்பதைப்பற்றி யோசனை செய்து கொண்டி ருக்கிறார்கள். அதற்காக ஸ்டேட் எஜுகேஷனல் கமிட்டி என்று போட்டு அதன் முன்பு இதைக் கொண்டு வந்து அதைப்பற்றி பரிசீலனை செய் வதற்கு எல்லாம் ஒரு வழி வகுத்திருக்கிறார்கள். இப்பொழுது இருக்கிற பஞ்சாயத்து போர்டுகள் ஆரம்ப பாடசாலைகள், சுகாதாரம், ரோடுகள்

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [30th September 1958

இவைகளை யெல்லாம் தான் முக்கியமாக கவனிப்பார்கள். அவைகளை யெல்லாம் அவர்கள் நல்ல முறையில் பாதுகாத்து அவர்களே அவைகளை பரிபாலனம் செய்துவரவேண்டும் என்றும் விதித்திருக்கிறார்கள். பஞ்சாயத்தும் சரி, பஞ்சாயத்து யூனியனும் சரி, இவைகளுக்கு வேண்டிய நிதி வசதிக்காக வரிகளைப் போட்டுக்கொள்ள வேண்டும் என்றும், அவ்விதம் எந்த எந்த வரிகளைப் போட்டுக்கொள்ளலாம் என்றும் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. எந்த எந்த வரிகளை பஞ்சாயத்துகள் போட்டுக்கொள்ளலாம் என்றும் எந்த எந்த வரிகளை பஞ்சாயத்து யூனியன்கள் போட்டுக்கொள்ளலாம் என்றும் பிரித்துக்கொடுத்திருக்கிறது. தவிர இப்படி வரி வசூல் செய்தும் நிதி போதவில்லை யென்றால் அதன் காரணமாக வரிக்குத்தக்கபடி சர்க்காரிலிருந்து " மாச்சிங் கிராண்ட் " (**Matching grant**) என்று கொடுப்பதற்கு வேண்டிய விதிகளை யெல்லாம் ஏற்படுத்தியிருக்கிறது. இதையெல்லாம் பார்த்தால் இனி வரப்போகும் பஞ்சாயத்துகளுக்கும் சரி, பஞ்சாயத்து யூனியன்களுக்கும் சரி, போதுமான பணம் இல்லை என்று சொல்வதற்கு இடம் இருக்காது என்று நான் உறுதியாக இவ்விடத்தில் சொல்லிக் கொள்ளுகிறேன்.

பஞ்சாயத்துகளுக்குப் பணம் வேண்டுமானால் கிராமத்தில் வரி போட்டு வசூலித்துக்கொள்வதற்கும் வசதி செய்யப்பட்டிருக்கிறது. பெரிய பஞ்சாயத்துகளாக இருந்தால் அவைகள் மேற்கொண்டு வரிகள் போட்டுக் கொள்ள வேண்டுமானால் எந்த எந்த வழிகளில் போட்டுக்கொள்ள வேண்டும் என்று கருதுகிறார்களோ அந்த அந்த வழிகளில் போட்டுக் கொள்வதற்குத் தீர்மானம் போட்டு, சர்க்காருடைய அங்கீகாரம் பெற்று, அப்படி போட்டுக்கொண்டு, தங்களுடைய வருவாயை அதிகரித்துக்கொள்வதற்கு வேண்டிய விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆகையால் இவ்விதமாக போதுமான அளவுக்கு வருமானத்தை சர்க்கார் கொடுக்க முன் வந்ததைப்பற்றி அவர்களை நான் பாராட்டுகிறேன்.

தவிர தேசீய விஸ்தரிப்புத் திட்டம், சமூதாய நல திட்டம், இவைகள் எல்லாம் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் பொறுப்பில் விட்டு விடப்படும். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மூலமாக இந்தத் திட்டங்களுக்கு தொகைகள் எல்லாவற்றையும் விநியோகித்து அவைகள் நல்ல முறையில் பணி செய்வதற்கான சில விதிகளையும் ஏற்படுத்தி இருக்கிறார்கள். அது எப்படி இருந்த போதிலும் சில பஞ்சாயத்துகளில் இருக்கக்கூடிய கோளாறுகள் என்னவென்றால் தலைவர்களுக்குப் போதுமான அதிகாரம் கொடுக்கப்படவில்லை என்பது தான் ஒரு முக்கியமான கருத்து. ஆனால் இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தை இன்னும் மறுபடியும் புனராலோசனை செய்து எவ்வளவு தூரம் அவர்கள் நல்ல முறையில் வேலை செய்து வருகிறார்கள் என்பதைப் பார்த்துகொண்டு மேற்கொண்டு அதிகாரங்களை அவர்களுக்குக் கொடுக்கலாம் என்ற உத்தேசம் சர்க்காருக்கு இருந்து கொண்டிருக்கிறது.

இவைகளை முக்கியமாக எடுத்துக்கொண்டு பார்த்தால் அவர்களுக்கு சில அதிகாரங்களைக் கொடுத்தால் அதனால் சில கஷ்டங்கள் ஏற்படுகின்றன. சில பிராந்தியங்களில், அதாவது அதிகாரங்களைக் கொடுத்த இடங்களில் நல்ல முறையில் அதிகாரங்களை உபயோகிக்கவில்லை என்பது சிலருடைய அபிப்பிராயம். கமிஷனர் வழிதப்பி நடந்தாலும் சரி, வேறு விதமாக பஞ்சாயத்து போர்டில் இருக்கும் உத்யோகஸ்தர்களும் சரி, சரிவர நடக்காவிட்டால் முக்கியமாக பஞ்சாயத்து தலைவர் அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்காக ஸ்டாண்டிங் கமிட்டி (**Standing Committee**) ஒன்றை போட்டு அவர்களுடைய பார்வையில் சிலவற்றை நிர்வகிக்க வேண்டிய விதிகளை ஏற்படுத்தி இருக்கிறார்கள். முக்கியமாக (**Appointment Committee**) அப்பாயிண்ட்மெண்ட் கமிட்டி என்று ஏற்படுத்துகிறார்கள். அதாவது உத்யோகஸ்தர்களை நியமிப்பதாக இருந்தால் கமிஷனருக்கு பூர்ண அதிகாரத்தைக் கொடுக்காமல், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவருக்கு இந்த முக்கியமான பொறுப்புகளைக் கொடுத்திருக்கிறார்கள்.

30th September 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

முக்கியமாக எல்லோரும் சேர்ந்து, எல்லா கட்சிகளையும் சேர்ந்த அங்கத்தினர்கள் சேர்ந்து, சர்க்காரிடத்திலுள்ள நல்ல அனுபவம் உள்ள உத்யோகஸ்தர்களை வைத்துக்கொண்டு இவைகளைப்பற்றி நன்ருகப் பரிசீலனை செய்து இந்தச் சட்டத்தைக் கொண்டு வநது, அது இப்பொழுது அமுலுக்கு வரப்போகிறது. இன்னும் இந்தச் சட்டத்தின கீழ் உடனடியாக நல்ல முறையில் பரிசீலனை செய்து பல விதிகளை ஏற்படுத்தி அவைகளையும் இந்த சட்டசபையின் முன் வைக்கப்போகிருர்கள். கூடிய சீக்கிரத்தில் கனம் அமைச்சர் அவர்கள் அவைகளை கொண்டுவரப் போகிருர்கள். அந்த விதிகளின் மூலம் இப்பொழுது இருக்கக்கூடிய சில தகராறுகள் எல்லாவற்றையும் போககுவதற்கு வழி ஏற்படும். சாதாரணமாக interference என்று சொல்லுவார்களே, பஞ்சாயத்துகளில் அனுவசியமாக தலையிடுவது என்பது இல்லாமல், அவர்களுடைய வேலைகளில் சர்க்கார் உள் புகுந்து கோளாறுகளை ஏற்படுத்தாமல் நல்ல முறையில் அவைகள் நடைபெறத் திட்டம் வகுக்கப் பட்டிருக்கிறது. நல்ல முறையில் வேலை செய்கிறவைகளை தடை செய்யாமல் இருப்பதற்கு நல்ல முறையில் சில விதிகளை ஏற்படுத்தி மக்களுக்கு அவைகள் எல்லாம் பலனளிக்கும்படி செய்து, மக்கள் எல்லோரும் சர்க்காருடன் ஒத்துழைத்து பணியாற்ற வேண்டும். பஞ்சாயத்துகளும் சரி, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலும் சரி, டெவலப்மெண்ட் கவுன்சிலும் சரி, நல்ல முறையில் மக்களுக்கு பணியாற்றுவதற்கு நல்ல சூழ்நிலையை உண்டாக்க வேண்டும். அதற்கு வேண்டிய விதிகளைச் செய்து அவைகளை சர்க்கார் இந்த சட்டசபையின் முன் வைத்து சட்டசபை அங்கத்தினர்கள் தங்களுடைய கருத்துக்களை மறுபடியும் தெரிவித்து மாறுதல்கள் செய்ய வேண்டுமாளுல் அவைகளைச் செய்து ஸ்தல ஸ்தாபனங்கள் எல்லாம் நம்முடைய தமிழ் நாட்டில் நல்லபடியாக பணி செய்யும்படியான வழியை சர்க்கார் ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் சபாநாயகர்
அவர்களே, இந்த மசோதாவை இங்கு சென்ற வருஷத்திலே கொண்டு 12-30
வந்தபோதும், வெள்ளையறிக்கையின மீது பரிசீலனை செய்து இந்த மசோதா தயாரிக்கப்பட்டு இங்கு கொண்டுவந்தபோதும், அநேக திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. அந்தத் திருத்தங்களை நாம் பரிசீலனை செய்தோம். ஏதோ அரசாங்கக் கட்சி மட்டும் அதில் ஈடுபட்டு, அவர்களுடைய சௌகரியத்துக்காகவோ அல்லது தனிப்பட்ட முறையிலோ தயாரித்த மசோதா அல்ல இது. கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள் முதன் முதலாக எந்த ஒரு அபிப்பிராயத்தைக் கொண்டார்களோ, அதே அபிப்பிராயத்தைத்தான் இப்பொழுதும் கொண்டு, இது அவசர அவசரமாகத் தயாரிக்கப்பட்டது என்று சொன்ஞர்கள். சென்ற ஒரு வருஷ காலமாக இதில் தக்க கவனம் செலுத்திளேம். இந்த மசோதா கொண்டு வருவதை தாமதப்படுத்தவேண்டும் என்ற அபிப்பிராயம் அல்ல. அதைத் தீவிரமாகப் பரிசீலனை செய்து, அதற்குத் தகுந்த நடவடிக்கைகள் எடுத்து, கொண்டுவந்திருக்கும் ஒரு மசோதாவை, ஏதோ அவசர அவசரமாக, கவனிக்காமல் கொண்டுவந்த ஒரு மசோதா என்றுள்ள ஒரு முறையில் குறிப்பிட்டது வருந்தத்தக்கது. ஆனல், உண்மையில் அதைச் சொல்லவேண்டுமென்று சொன்ஞர்களோ அல்லது எதிர்க் கட்சியில் இருப்பதால், ஏதோ ஆட்சேபணை சொல்லவேண்டுமென்று சொன்ஞர்களோ தெரியவில்லை. முக்கியமாக இரண்டாவது முறையைத்தான் அவர்கள் கையாண்டிருப்பார்கள் என்று தோன்றுகிறது. ஏனென்றல், அவர்களும் இந்த மசோதாவிற்குத் திருத்தங்கள் கொண்டுவருவதில் மிக ஆர்வம் காட்டினர். அதற்கு என்னுடைய மனமார்ந்த பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கனம் அங்கத்தினர் லாஸர் அவர்கள், இதில் தக்க கவனம் கொண்டு, ஆர்வம் காட்டி, அரசாங்கத்தின் குறிப்பையும், அரசாங்கம் எதற்காக இந்த நல்ல மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறது என்பதைப்பற்றியும் எடுத்துக்கூறினர்கள். அதுபோல், கனம் நல்லசிவம் அவர்களும்

[Srimathi Lourdhammal Simon] [30th September 1958

இதைப்பற்றிப் பேசினூர்கள். கனம் நல்லசிவம் அவர்கள் இதைப்பற்றி பேசும்போது, ஏதோ அதிகாரத்தை அரசாங்கம் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஒரே கருத்து இருப்பதாக அவருக்குத் தென் படுவதாகப் பேசினூர். இதை நாம் கவனிப்போமானல், இந்த அதிகா ரத்தை ஏதோ ஒரு படியில் வைக்கவில்லே. அதை ஒருவிதத்தில் பங்கீடு செய்து, கிராம மக்களும் அரசாங்கமும் ஒற்றுமையாக நடத்தத் தக்க நல்லமுறையில்தான் அதை அமைத்திருக்கிறேம். அதில் குறை கூறுவதற்குள்ள அம்சம் இல்லே என்று நான் நினைக்கிறேன். இந்த மசோதாவினல் பொதுமக்களுக்கு நல்ல முறையில் எவ்வளவு செய்ய லாமோ, பொதுமக்களுடைய நலத்தை எவ்வாறு காப்பாற்றலாமோ, அந்த முறையில் அதிலும் விசேஷமாக கிராம வாழ்க்கையில் இருப்பவர் களுக்குத் தகுந்த சௌகரியம் அளித்து, அவர்களுடைய முன்னேற்றத் திற்காக என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்யவேண்டுமென்ற நல்ல கருத்துக்களைக் கொண்டுதான் இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் பேசும்போது, இந்த மசோதா வருவதன் காரணமாக கிராமவாசிகள் மகிழ்ச்சி கொண்டி ருக்கிருர்கள், அவர்களிடையே மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்று அவர்கள் குறிப்பிட்டது மிகவும் மகிழ்ச்சிக்குரிய காரியம். இவ்விதமாக கிராம மக்கள் மகிழ்ச்சி அடைய வேண்டும் என்ற கருத்துடன்தான் அரசாங்கம் இந்த மசோதாவைத் தயாரித்திருக்கிறது. இவ்விதமான ஒரு உணர்ச்சி ஏற்படுமானல், கிராம மக்கள் அதிலே ஆர்வம் காட்டி இதை ஏற்றுக்கொள்வார்களானல், நாம் நினைக்கும் திட்டம் நிச்சயமாக வெற்றிய டையும் என்பதில் சந்தேகம் இல்லே.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் பேசும்போது, தேர்தல் சமயங்களில் சில தவறுகள் நடக்கின்றன என்பதைப்பற்றி பிரமாதமாகப் பேசினூர்கள். அவர்களுக்கு ஏதாவது வருத்தங்கள் இருக்கலாம். ஆனல், அது இந்த மசோதாவினல் ஏற்பட்ட தவறு அல்ல. இந்த மசோதா நல்ல முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆனல், தேர்தலில் ஈடுபடுகிறவர்கள் ஏதாவது தவறிழைத்தால், அது மசோ தாவின் காரணமோ அல்லது மசோதாவில் ஏற்பட்ட அந்த ஷரத்துக்களின் காரணமோ என்று கூறுவதற்கில்லே. அரசாங்கத்தின் நினைப்பு, தேர்தல் நல்ல முறையில் நடக்க வேண்டும் என்பது. எந்த முறையில் இதை மாற்றியமைத்தால் தேர்தல் நன்ருக நடக்குமோ அந்த முறையில் மாற்றி யமைக்கவேண்டும் என்ற கருத்தோடு தேர்தல் திட்டத்தையும் மாற்றி யமைத்து, அதனல் பொதுமக்களுக்கு நல்ல வசதி ஏற்படவேண்டும் என்ற கருத்தோடுதான் இந்த மாற்றங்களுடன் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இவ்விதமான தவறுகள் இனி நடக்காமல் இருப் பதற்கு எவ்வளவு கவனம் செலுத்தவேண்டுமோ அவ்வளவு கவனம் செலுத்துவதற்கு அரசாங்கம் தயாராகத்தான் இருக்கிறது. இவ்விதமான தவறுகள் எப்பொழுதும் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். ஆனல், அந்தத் தவறுகள் இந்த மசோதாவினல் ஏற்பட்டுவிடும் என்று எதிர்பார்ப்ப தற்கு இடம் இல்லே. பொதுமக்கள் உணர்ச்சி பெற்று, அவர்களுடைய உரிமையைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருப்பாரானல், இவ்விதமான தவறுகள் நம்மை விட்டகலும் என்றுதான் நான் எதிர் பார்க்கிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். பி. சுப்ரமண்யம் அவர்கள் மசோ தாவின் நல்ல நோக்கத்தை ஒரு விதத்தில் ஏற்றுக்கொண்டார். ஆனல், அதேசமயத்தில் கனம் கோவிந்தசாமி அவர்களுக்கு ஒரு பக்கத்துணையாக நின்று, அவசர அவசரமாக வந்த ஒரு மசோதா என்று இதைக் குறிப் பிட்டார். பக்கத்தில் இருந்ததினல் வந்த குறையோ தெரியவில்லே. அவ்விதமான தவறுகள் நடக்கவில்லே என்றுதான் நான் கூறுகிறேன். இன்னும் இதைக் காலதாமதம் செய்வதினல், நேற்றையதினம் முதலாக ஒரு மாதம் நீடித்துப் போவதினல் ஜனவரி மாதக் கடைசியில் காலாவதி கேட்டிருக்கிறது. இவ்விதமாக காலாவதியை நீட்டிக்கொண்டு போனல், இந்தப் பஞ்சாயத்து மசோதா எப்பொழுது அமுலுக்கு வருமோ என்ற

30th September 1958] [Srimathi Lourdhammal Simon]

சந்தேகம்தான் ஏற்படும். இவ்விதமாக இதை நீட்டிக்கொண்டு போவதைவிட, உடனடியாக அமுலுக்குக் கொண்டுவருவது நல்லது என்ற கருத்துடன் இதைத் தீவிர பரிசீலனை செய்து இந்தச் சபை முன் கொண்டு வந்திருக்கிறோம்.

கனம் எதிர்க்கட்சித் தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் இதில் முழுப் பங்கு எடுத்துக்கொண்டு, முழு ஆர்வம் காட்டி, இந்த மசோதாவிலுள்ள எல்லா ஷரத்துக்களையும் பரிசீலனை செய்வதில் தகுந்த அக்கறையுடன் அவற்றை ஏற்றுக்கொண்டு நடத்தினார். அந்தப் பொறுப்பை அவர் ஏற்றதினால் இந்த மசோதாவிலுள்ள எல்லா ஷரத்துக்களைப்பற்றியும், அவைகளின் நோக்கங்களைப்பற்றியும், அரசாங்கத்தின் எண்ணத்தைப்பற்றியும் அவர் தெளிவாகத்தான் கூறினார்கள். அரசாங்கம் எந்த மசோதாவைக் கொண்டுவந்தாலும் அதை எதிர்க்கவேண்டுமென்ற ஒரு மனப்பான்மையைத்தவிர வேறு ஒன்றும் இல்லாமல் எதிர்க்கும் சில அங்கத்தினர்களைப்போல் அல்லாமல், அவர் எதிர்க்கட்சித் தலைவராக இருந்தும், இவ்விதமான நல்ல மாறுதல்களை ஏற்று இவ்விதமான நல்ல திட்டங்களை ஆதரித்ததற்கு நாம் எல்லோரும் மகிழ்ச்சி அடையவேண்டும். இன்னும் அவர்கள் இந்த மசோதாவின் அமைப்பையும், அது எவ்வாறு நடக்கவேண்டும் என்பதையும் விரிவாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறினார்கள். அதற்காக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த வெள்ளை அறிக்கையை ஒரு வருஷ காலமாகப் பரிசீலனை செய்து, மசோதாவை இங்கு கொண்டுவந்த சமயத்திலும் அனேக திருத்தங்களையும் கொண்டுவந்து, அந்தத் திருத்தங்களைச் சரிவர பரிசீலனை செய்து, தகுந்த முறையில் அமைக்க, ஆலோசனை கூறின எல்லா கனம் அங்கத்தினர்களுக்கும், விசேஷமாக சர்க்கார்க் கட்சித் தலைவர் கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கும், எதிர்க்கட்சித் தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்களுக்கும், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் திரு. அண்ணாதுரை அவர்களுக்கும், கனம் அங்கத்தினர்கள் திருவாளர்கள். கோவிந்தசாமி, செல்வராஜன், அண்ணாமலை, ஸ்ரீனிவாச அய்யர், லாஸர், சங்கரன், சம்பத் முதலியவர்களுக்கும் எனது விசேஷ நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, இன்னும் எல்லோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மசோதாவை எல்லோரும் ஆதரித்து சரியான முறையில் நடப்பதற்குத் தங்களுடைய முயற்சியால் நல் ஆதரவு கொடுத்தால் இதில் நாம் வெற்றி காண்போம் என்ற உறுதியுடன் இந்தச் சபையில் இதை ஆதரித்துச் சட்டமாக்கும்படியாகக் கேட்டுக்கொள்கின்றேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Panchayats Bill, 1958 (L.A. Bill No. 33 of 1958), as amended, be passed." 12-40 p.m.

The motion was put and carried and the Bill, as amended, was passed.

## (2) THE MADRAS PUBLIC HEALTH (AMENDMENT) BILL, 1958 (L.C. BILL NO. 6 OF 1958)

*THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras-Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958) as passed by the Legislative Council be taken into consideration."

Section 92 of the Madras Public Health Act, 1939 (Madras Act III of 1939) prohibits the construction or establishment of any new factory, workshop or work-place or the carrying on of any new

---

* Printed as Appendix IX on page 1140 infra.

[Sri M. A. Manickavelu] [30th September 1958

offensive trade in the areas reserved for 'residential purposes' under section 89 of the said Act. In view of this provision, the construction or establishment of any new factory, workshop or work-place in 'notified residential areas' for the purpose of carrying on a cottage industry is not permissible. Consequently installation of any machinery of even a small horse power ranging from 1/2 to 3 for such cottage industries in the notified residential areas is also not permissible. To enable the growth of cottage industries, it is necessary to amend the said provision suitably so as to permit the construction or establishment of any new factory, workshop or work-place in notified residential areas for the purpose of carrying on a cottage industry. This will enable the grant of permission also for installation of machinery of small horse power for cottage industries. I therefore commend the motion for the acceptance of the House.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958) as passed by the Legislature Council, be taken into consideration."

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I am not so much in favour of the introduction of this Bill. Because, it has not been clearly defined as to what is meant by a cottage industry. Further, even if a cottage industry is started in those built-up areas, the nuisance will always be there. I am sure the residents of the locality will be put to lot of inconvenience and nuisance and the Government cannot deny that fact. When we look at the provisions of the Bill, we have to come to the conclusion that the authorities of the Public Health department may not enforce the provisions as rigidly as they should. That is my first submission. Even so far as the existing provisions of the Act are concerned, we find that the rules are infringed in a number of places and even with regard to the foodstuffs the rules are not properly and efficiently enforced. So, I doubt very much whether the departmental people will be able to effectively enforce the provisions of the proposed Bill. Further we all know that most of the people—I do not say everybody—do not have civic conciousness. Whatever it is, whenever we introduce measures like the one that we are just now considering, the provisions are more honoured in their breach than in their observance. That is the position. My contention is that the Government should concentrate more on the preventive side than on the curative side of the diseases.

Sir, it was stated that motors will be erected in certain places and wherever there is no electricity, they may even put up oil engines. If oil engines and even if electric motors were installed, I am sure still the noise will be there. There are so many other types of nuisance to the residents. That is my second submission.

My third submission is this. The Government should proceed rather cautiously in giving effect to measures like this, especially with reference to the extension of the provisions of this Bill to the various areas. Even if this Bill is passed, the Government should

30th September 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

be very careful in enforcing the provisions. I am sure the Government will define what a cottage industry is. Once this Bill is passed, there may be so many applications coming forth from the private sector and they should not be influenced by all sorts of pressure.

So, in the first instance, the Government should clearly define what a 'cottage industry' is. After defining it, when they give permission for the installation of the machinery, they should be very cautious to see that no untoward nuisance or harassment is caused to the residents in that particular locality by their giving such permission. That is all my submission.

**Srimathi T. N. ANANDANAYAKI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சென்னை பப்ளிக் ஹெல்த் திருத்த மசோதாவில் 92-வது ஷரத்தில் குடிசைத் தொழில் அபிவிருத்தி செய்வதற்கு அவ்வப்போது அரசாங்கம் குடிசைத்தொழில் இன்னவை என்று சிலவற்றை விளம்பரப்படுத்துவதற்கு அனுமதிக்கலாம் என்கிற பவரைக் கோரி வந்திருக்கிறார்கள். இது வரவேற்கத்தக்கதுதான். செக்ஷன் 89-ஐ வைத்துக்கொண்டு பப்ளிக் ஆக்ட்படி வேறிடங்களில் வகை செய்யப்பட்டிருக்கிறது. அதாவது ஒரு இடத்தை தொழில் நடத்துவதற்கு ஏற்ற இடம், குடியிருப்புக்கு மாத்திரம்தான் தகுதி உடைய இடம் என்பதாக இரண்டு பிரதேசங்களாகப் பிரித்து, குடியிருப்புப் பிரதேசங்களில் தொழில் நடத்துவதற்கு லைசென்சு மறுக்கப்படலாம் என்பதற்கு ஏற்கனவே சட்டத்தில் வகை இருக்கிறது. ஆனால் நகராண்மைக் கழகங்களை எடுத்துக்கொண்டால் பலவிதமான கஷ்டங்கள் இருக்கின்றன. இன்னும் இவை தொழில் நடத்துவதற்கு ஏற்ற இடம், இந்த இடத்தில் குடியிருக்கலாம், தொழில் நடத்தக் கூடாது என்பதாக சரியாகப் பிரிக்கப்படவில்லை. ஒரு வீதியில் ஒரு பகுதி குடியிருப்புக்கு லாயக்குள்ளதாகவும், மற்றொரு பகுதி தொழில் நடத்துவதற்குத்தான் லாயக்கு என்றும், இன்னும் சொல்லப்போனால் ஒரு வீட்டிலேயே ஒரு பகுதி குடியிருப்புக்கு லாயக்கு என்றும், இன்னொரு பகுதி தொழில் நடத்துவதற்கு லாயக்கு என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி நகராண்மைக் கழகங்கள் நல்லமுறையில் ஆராய்ச்சி நடத்தி, அவர்களது ஆலோசனைகளை எல்லாம் அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்கள். அவர்கள் ஆலோசனை சொல்லி இரண்டு ஆண்டுகள் ஆகியும் கூட இன்னும் முடிவு காணப்படவில்லை. இந்த நிலையில் குடியிருப்புப் பகுதியில் எந்தத் தொழில் நடத்துவதற்கும் சட்டம் இடம் கொடுக்காது. இந்தச் சட்டத்தின்படி அழுக்குத் துணிகளைச் சேகரிக்கும் லாண்டரி (சலவை சாலை) குடிசைத்தொழில் என்ற முறையில் மக்கள் குடியிருக்கும் பகுதியில் வைக்கக் கூடாது என்று வந்துவிடும். இம்மாதிரியாகச் செய்யக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். அதுமட்டுமல்ல. சில மாவு அரைக்கும் மில்கள், அச்சகங்கள் இவைகள் எல்லாம் ஹார்ஸ் பவர் வைத்து நடத்தப்படுவதால் அவற்றையும் குடியிருப்புப் பகுதியில் வைக்கக் கூடாதென்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இவையெல்லாம் மக்களுக்கு அன்றாட அத்தியாவசியமான காரியங்களுக்கு உபயோகப்படுவதால் மக்கள் வசிக்கக்கூடிய இடங்களிலேயே இருப்பதுதான் நல்லது. அதோடு பலவிதமான கஷ்டங்களுக்கும் காரணம் அரசாங்கம் நகராண்மைக் கழகம் அனுப்பியுள்ள ஆலோசனைகளின் பேரில் இன்னும் திட்டவட்டமாக முடிவு எடுத்துக்கொள்ளாததுதான். சீக்கிரமாக அதன் பேரில் ஒரு முடிவும் எடுக்கவேண்டும். கடலைமாவு, அரிசிமாவு போன்ற 12-50 p.m.
வைகள் அன்றாடம் தேவைப்படுபவை. எனவே அவைகள் அடிக்கடி அரைக்கப்பட வேண்டியிருக்கும். அரிசி மில்களும் மாவு மில்களும் குடியிருப்புப் பிரதேசத்திற்கு அருகே இருந்தால்தான் அங்கே சென்று அவைகளை உடனடியாக அரைத்துவர முடியும். அவை குடியிருப்புப் பிரதேசமல்லாத பகுதிகளில் இருந்தால் மாவு அரைத்துவர நேரமாகும்.

அந்தக் கஷ்டம் பெண்களுக்குத்தான் தெரியும். மாவு மில் வெகு தூரத்தில் இருந்தால் அங்கே அனுப்புவதற்கு ஆளைத்தேடுவது கஷ்டம். ஆள் கிடைத்தாலும் அந்த ஆள் வெகு தூரம் போவது கஷ்டம். அவன் வெகு தூரம் போனாலும் திரும்பிவர நேரமாகும். இந்த நேரத்தில் சமையலாவது தாமதப்படும். சமையலாவது தாமதமானால் ஆண்களுக்குக் கஷ்டம் ஏற்படும். அன்றாடத் தேவையில் பத்திரிகைகள்கூட வருகின்றன. லாண்டிரி, ஸலூன் போன்ற இடங்களுக்கும் மக்கள் அடிக்கடி போய்வர வேண்டியிருக்கிறது. குடிசைத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களை மட்டும் காப்பாற்றாமல் இந்தத் தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களையும் காப்பாற்ற வேண்டும். லாண்டிரி, ஸலூன், அரிசி-மாவு மில்கள் முதலியவை வெகு தூரத்திலுள்ள குடியிருப்பிற்கல்லாத பிரதேசங்களில் இருந்தால் அந்த இடங்களுக்கு அடிக்கடி செல்லும் மக்கள் அரசாங்கத்தை சபித்துக் கொண்டே போவார்கள். இவைகள் " ஒர்க்ஷாப் " கள் தானே என்று கருதக்கூடாது. அவ்வாறு கருதி இவைகளை வெகு தூரத்திலுள்ள குடியிருப்பிற்கல்லாத பகுதிகளுக்குக் கொண்டுபோகக்கூடாது. இது சம்பந்தமாக கார்ப்பரேஷன் அரசாங்கத்திற்கு ஒரு அறிக்கை அனுப்பியிருக்கிறது. அந்த அறிக்கையில் லாண்டிரிகள், ஸலூன்கள் முதலியவைகள் குடியிருப்புப் பிரதேசங்களில் இருக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அரசாங்கம் அவ்வப்போது எவ்வாறு தீர்மானிக்கிறதோ அவ்வாறுதான் விதி விலக்கு அளிக்கப்படும் என்று சொன்னால், மக்களுக்கு அன்றாடம் உபயோகப்படக்கூடிய தொழிற்சாலைகள் தூரத்தில் அமைந்துவிடும். 89-வது ஷரத்தின்கீழ் ஒரே பிரதேசத்தில் ஒரு பகுதியை குடியிருப்புப் பகுதியாகவும் மற்றொரு பகுதியை குடியிருப்புக்கல்லாத பகுதியாகவும் பிரித்தால் இத்தகைய தொழில்களுக்குக் கஷ்டம் ஏற்படும். அதேமாதிரி மளிகைக் கடைகளும் குடியிருப்புப் பகுதிக்கு அருகாமையில் இருக்க வேண்டும். ஏனென்றால், மளிகைச் சாமான்கள் அன்றாடத் தேவைகள். வீட்டிலிருந்து $1\frac{1}{2}$ மைலுக்கு அப்பால் மளிகைக் கடை இருந்தால் மக்கள் கஷ்டப்படுவார்கள் ; அவசர காலத்தில் ஏதாவதொரு மளிகைச் சாமான் வாங்கவேண்டியிருந்தால் மக்கள் வெகு தூரம் போக வேண்டியிருக்கும். இந்த ஷரத்திலிருந்து எந்த எந்தத் தொழிற்சாலைகளுக்கும் கட்டிடங்களுக்கும் விலக்குத் தரப்பட வேண்டுமென்று கார்ப்பரேஷன் சர்க்காருக்கு ஒரு அறிக்கை அனுப்பியிருக்கும்போது அந்தத் தொழில்கள் எல்லாவற்றிற்கும் விலக்களிக்காமல் குடிசைத் தொழில்களுக்கு மாத்திரம் விலக்களிப்பது சரியல்ல. 92-வது ஷரத்தின்கீழ் அன்றாடத் தேவைகளைப் பூர்த்திசெய்யக்கூடிய தொழிற்சாலைகளுக்கு விலக்கு அளிக்கப்படவேண்டும். " அரிசி-மாவு மில்கள் போன்ற தொழிற்சாலைகள் வீட்டிற்குப் பக்கத்தில் இருந்தால் எங்களுக்கு எப்போதும் ஓசைத் தொந்தரவு இருக்குமே. சத்தத்தோடு குடியிருப்பதற்கா வீட்டை வாங்கி அதில் வசிக்கிறோம் " என்று வீட்டுச் சொந்தக்காரர்கள் கேட்பார்களே என்று கனம் அமைச்சர் சொல்லக்கூடும். மில்களுக்குப் பக்கத்தில் இருக்கும் வீட்டுக்காரர்களுக்கு சத்தத் தொந்தரவு இல்லாமல் இருப்பதற்கு கார்ப்பரேஷன் நடவடிக்கை எடுத்துவருகிறது. மெஷின்களிலிருந்து வரும் சத்தம் பக்கத்து வீட்டுக்காரர்களை பாதிக்காதபடி மில்களில் **glass panels** போட்டு சத்தத்தைத் தடுத்திருந்தால்தான் மில்களுக்கு கார்ப்பொரேஷன் லைஸென்ஸ் கொடுக்கிறது. மில்களில் **glass panels** போடப்பட்டிருக்கின்றனவா என்றும், அவை நல்ல நிலையில் இருக்கின்றனவா என்றும் கார்ப்பரேஷன் அவ்வப்போது சோதனை நடத்துகிறது. அப்படி இருக்கும்போது, **trade jealosy**யின் காரணமாகவோ விரோதத்தின் காரணமாகவோதான், குடியிருப்புப் பிரதேசங்களிலுள்ள மாவு மில்களால் தொந்தரவு இருக்கிறதென்ற புகார் வரும். மாவு மில்லின் உபயோகம் தேவைப்படும்போதுதான் ஒருவருக்கு அது வெகு தூரத்தில் இருப்பதிலுள்ள கஷ்டம் தெரியும். எந்த எந்தத் தொழில்களுக்கு 92-வது ஷரத்திலிருந்து விலக்கு அளிக்க வேண்டுமென்று நான் கொடுத்திருக்கும் திருத்தத்தில் குறிப்பிட்டிருக்கிறேன். அதில் நான் குறிப்பிட்டிருக்கும் தொழில்கள் மக்களின் அன்றாடத் தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடிய தொழில்கள். என் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். கார்ப்பரேஷன்

30th September 1958] [Srimathi T. N. Anandanayaki]

அறிக்கையில் கண்டிருக்கும் அத்தனை தொழில்களுக்கும் இந்த ஷரத்தி லிருந்து விலக்களித்தால் அது வரவேற்கத்தக்கது என்று சொல்லிக் கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, சென்னை பொது சுகாதாரச் சட்டத் திருத்த மசோதாவை நான் வர வேற்கிறேன். பொதுவாகவே, சுகாதாரச் சட்டத் திருத்த மசோதா வானது எல்லாஷரத்துக்களிலும் அவசியமான திருத்தங்கள் கொண்டதாகத் தயாரிக்கப்பட்டு சுகாதார (திருத்த) சட்டத்தில் உள்ள எல்லா ஷரத்துக்களும் ஒருமித்துத் திருத்தப்பட்டு சுகாதார (திருத்த) சட்டம் கொண்டுவரப்பட வேண்டியது நியதியாக இருந்தாலும், மிக மிக இன்றியமையாத அவசியம் ஏற்படும்போது இப்படிப்பட்ட திருத்த மசோதாக்களைக் கொண்டுவருவதன் மூலம் பொதுமக்களின் நலனைப் பாதுகாப்பது மிக மிக அவசியம். அந்த முறையில் இந்த மசோதா வரவேற்கத்தக்கது.

சென்னை நகரைப் பொறுத்தவரையில், குடியிருப்புப்பகுதி, குடியிருப்பிற்கு மட்டுமல்லாத பகுதி, தொழிற்சாலைகளுக்கேற்ற பகுதி, என்ற பாகு பாடு ஓரளவு செய்யப்பட்டிருந்தாலும், இந்த விஷயத்தில் கொள்கைத் தெளிவு இல்லாததால் ஓரளவு குழப்பம் ஏற்படுகிறது. இப்போது எதைக் குடியிருப்புப் பகுதியாகவும் எதை பிறவகைப் பகுதியாகவும் பிரிக்கிறார் கள் என்று பார்ப்போம். ஏற்கெனவே சில இடங்களில் சில தொழிற் சாலைகள் இருந்தால் அந்த இடங்களை குடியிருப்பிற்கல்லாத பிறவகைக் காரியங்களுக்கும் பயன்படத்தக்க பகுதி என்றும், தொழிற்சாலைகள் கனிச மான அளவில் இல்லாத இடங்களை குடியிருப்பிற்குமட்டுமுரிய பகுதி என்றும் பிரித்து விடுகிறார்கள். இவ்வாறு பிரிப்பதால், ஆங்காங்குள்ள மக்கள் சிறு தொழிற்களைக்கூட நடத்த முடிவதில்லை. குடிசைத் தொழில்களுக்குச் சென்னை எவ்வளவு தூரம் பயன்படும் என்று பார்க்க வேண்டும். குடிசைத் தொழில்கள் சென்னையில் எவ்வளவு தூரம் வளரும் என்று பார்க்க வேண்டும். குடிசைத் தொழில்கள் கிராமங்களிலும் சென்னை நீங்கலாக மற்ற நகரப் பகுதிகளிலும் பெருவாரியாகத் தோன்றி வளரும். சென்னை நகரில், குடிசைத் தொழில்கள் ஓரளவு நடந்தாலும் அவை எப்போதும் குடிசைத் தொழில்களாகவே நடக்காது. அவை ஒரு சில ஆண்டுகளுக்குப் பிறகு நவீன விஞ்ஞான சாதனங்களின் துணையுடன் நடக்கத் தொடங்கும். இயந்திரம் வைத்து சிறு தொழில் நடத்துபவர்கள் அத்துடன் மின் இயக்கத்தைத் தொடர்பு படுத்தி இயந்திரத்தை இயக்கத் தொடங்குவார்கள். அவர்கள் தொழிலை அவ்வாறு நடத்தும்போது, அந்தத் தொழில் "பாக்டரி" என்ற இலக்கணத்துள் அடங்கும். "பாக்டரி" என்ற இலக்கணத்திற்குள் அத்தொழில் வந்து விட்டால், அது முதலில் பெற்றிருந்த உரிமையை இழக்கும். அந்த நிலையில் அந்தத் தொழிலை நம்பி வாழ்ந்து வந்த ஆயிரக்கணக்கான மக்கள் வேலை இழப்பார்கள். அந்த நிலை ஏற்படாதபடி சட்டத்திற்கு விதிகளை வகுக்க வேண்டும்.

அடுத்தபடியாக, திருமதி அனந்தநாயகியார் அவர்களின் கருத்திற்கு எதிராகவே நான் பல விவாதங்களில் பேசியிருந்தாலும், இந்தத் தடவை மட்டுமாவது நான் தெரிவிக்கவிருக்கும் கருத்து அவர்களுடைய கருத்தை ஆதரிப்பதாக இருப்பது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். அவர் சென்னை நகரத்தின் நிலைமையை நன்கு புரிந்து கொண்டிருக்கிறார். அவர் கார்ப்பரேஷன் கவுன்சிலராகவும் இருப்பதால் நகரிலுள்ள கஷ் டங்களை நன்றாக விளக்கினார். அதிலும், குடும்பப் பெண்ணின் பாரத்தை நன்றாக உணர்ந்து எடுத்துச் சொன்னார். குடும்பக் கஷ்டங்களை அதிகரிக்காத முறையில் இந்த விதிகள் வகுக்கப்படுமானால் நான் பெரிதும் மகிழ்ச்சியடை வேன். அவ்வாறு செய்ய வேண்டுமானால் குடிசைத் தொழில்களுக்கு அளிக்கும் விதிவிலக்கை பெரிய தொழில்களல்லாத எல்லாத் தொழில் களுக்கும் அளிக்க வேண்டும். 3-க்குக் குறைந்த ஹார்ஸ் பவரை உப யோகிக்கும் தொழில்கள் குடிசைத் தொழில்களாகக் கருதப்படும் என்று

தெரிவிக்கப்பட்டிருக்கிறது. சலவைத் தொழிலாக இருந்தாலும், வளை அறுக்கும் தொழிலாக இருந்தாலும், அச்சகத் தொழிலாக இருந்தாலும், அவைகள் 3 ஹார்ஸ் பவர்ரை உபயோகித்தாலும், அன்றாடம் பயன்படும்
1 p.m. அத்தகைய தொழில்களை குடியிருப்புப் பகுதி என்ற காரணத்தால் தடை செய்யக்கூடாது என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், அவை அன்றாடத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் தொழில்களாக இருப்பதுடன் மட்டுமன்றிச் சிறிய தொழில்களாகவும் இருக்கின்றன. குறிப்பாக நான் அச்சுத் தொழிலைப்பற்றிச் சொல்வேன். அச்சுத்தொழில் பெரும்பாலும் குடிசைத் தொழிலுக்கு அடுத்த கட்டத்தில் நடைபெறுகிற தொழிலாகும். சாதாரணமாக அச்சகங்களில் நாலைந்து பேர்கள் வேலை செய்வார்கள். அவர்களுக்கு அச்சகத்தில் வேலை இல்லையென்றால் பிழைப்பிற்கு வேறு வழி கிடையாது. அச்சுத்தொழில் நடத்துகிறவரும் அதை வைத்துக் கொண்டுதான் தன் குடும்பத்தை நடத்துபவராக இருக்கிறார். ஜனநாயக எண்ணம் மக்களிடையே பரவவும், மக்களிடையே அறிவு வளரவும் அச்சுத் தொழில் துணை புரிகிறது. அறிவு வளர்ச்சிக்கு அது மிக மிக அவசியமாக இருக்கிறது. ஆகவே, அச்சுத் தொழில் பரந்த அளவில் மிகவும் விரிவான அளவில் நடைபெறுமானால் அவற்றை மட்டுந்தான் பாக்டரியாக கருதலாமே தவிர, 3 ஹார்ஸ் பவர் வரையில் வைத்துக் கொண்டு அந்தத் தொழிலை செய்வார்களேயானால் அதைக் குடிசைத் தொழிலாகக் கருதுவதற்கு அமைச்சர் அவர்கள் முன்வரவேண்டும். அந்த முறையில் தொழில்கள் வளர இந்தச் சட்டம் துணையாகயிருக்க வேண்டும். இன்றையதினம் கார்ப்பரேஷன் விதிப்படி பல சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் தடுத்து நிறுத்தப்படுகின்றன. அவற்றிற்கெல்லாம் விதிவிலக்கு அளிக்கும் வகையில் இந்தச் சட்டம் பயன்படுத்தப்பட வேண்டுமென்று சொல்லிக் கொண்டு இந்தச் சட்டத்தை வரவேற்று எனது உரையை முடிக்கிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு சின்ன விஷயத்திற்காக மட்டுந்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆனால் சில அங்கத்தினர்கள் சுகாதாரச் சட்டத்தில் இருக்கிற சில குற்றங்குறைகளை எல்லாம் நீக்கவேண்டுமென்று சொன்னார்கள். அதுவேறு விஷயம். அந்தச் சட்டத்தில் உள்ளதில் எவைகளையெல்லாம் திருத்த வேண்டுமென்பது அதைத் திருத்தும்போது கவனிக்கப்படும். காட்டேஜ் இண்டஸ்ட்ரி என்று சொல்லும்போது, குடிசைகளில்தான் செய்யவேண்டுமென்று அர்த்தம் இல்லை. வேறு நல்ல பதம் இல்லாததால் அப்படிச் சொல்லப்படுகிறது. கொஞ்சம் பவர் வைத்து நடத்தும் தொழில்கள் கூட அந்த அர்த்தத்தில்தான் வரும். 92-வது பிரிவுப் பிரகாரம், அரசாங்கத்தின் நோக்கம் என்னவென்றால், அர்பன் ஏரியாக்களில், இண்டஸ்ட்ரியல் ஏரியாவில், தொழில் செய்யத் தனியாக இடமிருக்க வேண்டும், இருப்பிடம் தனியாக இருக்க வேண்டும் என்று அந்த முறையில் பிரித்து அமைக்கப்பட்டிருக்கிறது. குடியிருக்கும் இடத்தில் 20, 30 ஹார்ஸ் பவர் உள்ள ரைஸ்மில் போன்றவைகளை வைத்தால் அதனால் சுகாதாரம் கெட்டுப்போய்விடுகிறது. அது அப்படியே இருப்பதால் அடிக்கடி மனுக்கள் வருகின்றன. நாங்கள் சிறு தொழில்தான் செய்கிறோம், அதற்கு "எக்ஸ்ஸெம்ஷன்" வேண்டுமென்று கேட்கிறார்கள். சிலது கொடுக்கப்பட்டிருக்கிறது, சிலது கொடுக்கப்படவும் இல்லை. ஆக, சரியான விதி முறை இல்லாததால் இதைத் திருத்தவேண்டுமென்று இம்மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இன்னொன்று, இந்த ஆக்ட் அமுலுக்கு வருவதற்கு முன்னர் ஒரு தொழில் நடந்து கொண்டிருந்தால் அது அப்படியே இருக்கலாம். ஆனால் அவைகளை "ரெஸ்ட்ரிக்ட்" செய்யலாம். தவிர, அந்தத் தொழில் கூடாதென்று சொல்லவில்லை. குடிசைத் தொழில்கள், மற்ற முன்னேற்றமடைந்த நாடுகளில் கொஞ்சம் அளவில் பவர் வைத்து நடத்துகிறார்கள். உதாரணமாக, ஜப்பான், ஸ்விட்ஸர்லண்ட் போன்றயிடங்களில், ஸ்வட்ஸர்லந்தில் ஒவ்வொரு வீட்டிலும் 1, 2 ஹார்ஸ் பவர் வைத்து குடிசைத்தொழில்கள் நடத்துகிறார்கள். ஸ்விட்ஸர்லாந்தில் கடிகாரம், வாச்கள் முதலியன செய்வது குடிசைத் தொழிலாக நடந்து வருகிறது.

30th September 1958] [Sri M. A. Manickavelu]

சின்னத் தொழில்கள் செய்ய வேண்டுமென்றால் குடியிருப்பு இடத்தில் தான் செய்யவேண்டுமே தவிர இண்டஸ்ட்ரியல் ஏரியாவிற்கு போக முடியாது. இச்சட்டப் பிரகாரம், அவ்வப்போது ½ ஹார்ஸ் பவர் முதல் 3 ஹார்ஸ் பவர் வரை எதை எதை கொடுக்கலாம் என்பதை அறிக்கை மூலம் தெரிவித்து கொடுக்கலாம். காட்டேஜ் இண்டஸ்ட்ரி என்றால் குடிசையில் செய்யப்படும் தொழில் என்று அர்த்தமல்ல. சின்ன ஹார்ஸ் பவரைக் கொண்டு செய்யப்படும் தொழில்களும் அதில் சேரும். சமையல் செய்யும் தொழிலை வேண்டுமானாலும் அதில் சேர்த்துக் கொள்ளலாம். ஆகவே, இந்த திருத்தத்தினால் ஒரு விபரீதமும் ஏற்பட்டு விடப்போவதில்லை என்று சொல்லிக்கொண்டு இந்த பிரேரணை சபை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958), as pased by the Legislative Council be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

MR. SPEAKER : Srimathi Anandanayaki has given notice of an amendment.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் அமைச்சர் அவர்கள் ½ முதல் 3 ஹார்ஸ் பவர் வரை உள்ளவற்றிற்கு விதிவிலக்கு தருகிறேன் என்று பெரிய மனதோடு சொன்னதால் நான் என் திருத்தத்தை பிரேரேபிக்க வில்லை.

Clause 2 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958), as passed by the Legislative Council be passed."

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958), as passed by the Legislative Council be passed."

* SRI A. GOVINDASAMY : தலைவர் அவர்களே, இம்மசோதாப் பிரகாரம் பிரின்ட்டிங் பிரஸ்க்கு விதிவிலக்கு அளித்ததற்கு அமைச்சர் அவர்களை நான் பாராட்டுகிறேன். இது, குடிசையில்தான் செய்யப்பட வேண்டுமென்ற நிலையில்லாது ஏற்கெனவே இண்டஸ்ட்ரியல் ஏரியா அல்ல என்று ஒதுக்கப்பட்டயிடங்களிலும் செய்து கொள்ள அனுமதி அளித்ததற்காக நான் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். ஒரு சில இடங்களில் வீட்டின் ஒரு பகுதியை இண்டஸ்ட்ரியல் ஏரியாவாகவும், வேறு ஒரு பகுதியை நான்-இண்டஸ்ட்ரியல் ஏரியாவாகவும் வைத்திருக்கிறார்கள். அந்நிலைமையை முன்பு சுகாதார அமைச்சராக இருந்த கனம் ஏ. பி. ஷெட்டி அவர்களிடம் எடுத்துச் சொல்லி அது ரத்து செய்யப்பட்டது. அந்த மாதிரி எந்தெந்தயிடங்களில் இந்தத் தகராறு இருக்கிறதோ அவைகளையெல்லாம் பரிசீலித்துக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டு அமைச்சர் அவர்களை மீண்டும் பாராட்டிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

[30th September 1958

* **Sri T. SAMPATH :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர்கள் பேசும்போது இந்த 92-வது பிரிவில் இருக்கக்கூடிய சில சங்கடங்களை எடுத்துச் சொன்னார்கள். அந்தப் பிரிவின் உள்பிரிவாக இது திருத்தியமைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு பதில் அளிக்கும் வகையில் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், மற்ற பிரிவுகளை பொது சுகாதாரச் சட்டத்தின் மற்ற பிரிவுகளைத்திருத்தியமைக்க யோசிக்கும்போது இவைகளை எல்லாம் பற்றி யோசிக்கலாம் என்று சொன்னார்கள். இந்த சந்தர்ப்பத்தில் நான் அமைச்சர் அவர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். இந்தச் சட்டம் 1939-ம் ஆண்டிலே இயற்றப்பட்டது. அது நிறைவேற்றப்பட்டு 19 வருடங்களாகின்றன. இந்தச் சட்டத்தை திருத்தியமைக்கவேண்டிய ஒரு அத்தியாவசியம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. ஏனெனில் 1939-ம் ஆண்டில் இருந்த ஒரு சூழ்நிலையில் இந்த ஷரத்துக்கள் எல்லாம் அந்த சட்டத்தில் அமைக்கப்பட்டது. ஆனால் இப்பொழுது அந்த சூழ்நிலை மாறுபட்டிருக்கிறது. அதோடு இன்னும் பல சங்கடங்களும் ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே அமைச்சர் அவர்கள் சீக்கிரத்தில் இந்த பொது சுகாதாரச் சட்டத்தை "கோடிபை" செய்து, புதியதொரு சட்டத்தைக் கொண்டுவந்தால் மக்களுக்கு மிகவும் நலமாக இருக்குமென்று தெரிவித்துக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri M. K. SOMASUNDARAM :** கனம் சபாநாயகர் அவர்களே அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்தச் சட்டத்தை வரவேற்று அவர்களை பாராட்டுகிறேன். அதில் சில திருத்தங்கள் கொண்டுவந்தால் நலமாக இருக்கும். அம்மையார் அவர்கள் சொன்னபடி, மளிகைக் கடைகள் போன்ற கடைகளை "ரெஸிடென்ஷியல் ஏரியா"-வில் வைத்து நடத்த அனுமதி கொடுக்கப்பட வேண்டும். டிஸ்ட்ரிக்ட் போர்ட் ஆக்டில் இருப்பதுபோல் அவைகளுக்கு விதிவிலக்கு கொடுக்கவேண்டும். ஆகவே சிறு சிறு காட்டேஜ் இன்டஸ்ட்ரீஸ் நடக்கும் இடங்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்படவேண்டும். ஒரு வீட்டிற்குள்ளே ஒரு பகுதியில் என்ஜின்கள் "இன்ஸ்டால்" செய்யப்பட்டிருக்கும். இன்னொரு பகுதி "ரெஸிடென்ஷியல் ஏரியா"-வாகயிருக்கும். ஆகவே, நான் சொல்வது என்னவென்றால் அப்படி "இன்ஸ்டால்" செய்வது தனியிடத்தில் இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

1-10 p.m. * **The Hon. Sri M. A. MANICKAVELU :** நான் முன்பே சொன்னேன். இது சாதாரணமாக ஒரு ஹார்ஸ்-பவர் இருக்கக்கூடிய மெஷின்களை எல்லாம் வைத்துக்கொள்ளலாமென்றிருந்தது. இதில் முக்கியமான கருத்து என்னவென்றால் சுகாதாரத்திற்கு பாதகம் ஏற்படக்கூடாது. அதோடு பொது ஜனங்களுக்கு தொந்தரவும் இல்லாத வகையில் குறைந்த பட்சம் எந்த விதத்தில் சௌகரியமாக இருக்க வேண்டுமோ அந்த வகையில் ஏற்பாடு செய்யப்படும். யாராவது இதற்கு விரோதமாக நடந்து கொண்டால் அதை அபென்ஸிவ் என்று கருதி அதை நிறுத்தப்படும். மற்றபடி சுகாதாரத்திற்கு பாதகம் இல்லாத முறையில் பொது ஜனங்களுக்கு தொந்தரவு இல்லாத முறையில் இருக்கக்கூடிய எல்லா தொழில்களும் அனுமதிக்கப்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER :** The question is—

"That the Madras Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958), as pased by the Legisiative Council be passed."

The motion was put and carried and the Bill was passed.

**Mr. SPEAKER :** I adjourn the House to meet again at 3-30 p.m.

**(After lunch—3-30 p.m.)**

**VI.—NON-OFFICIAL BUSINESS.**

*A.—Bills.*

THE MADRAS DOWRY PROHIBITION BILL, 1958 (L.A. BILL NO. 21 OF 1958)

SRI N. K. PALANISAMI : Sir, under rule 21 (3) of the Assembly Rules, I move—

"That the Madras Dowry Prohibition Bill, 1958 (L.A. Bill No. 21 of 1958) be taken up later."

The motion was duly seconded.

The motion was put and carried.

*B.—Resolutions.*

APPOINTMENT OF A COMMITTEE TO ENQUIRE AND MAKE RECOMMENDATIONS REGARDING SERVICE CONDITIONS AND SCALES OF PAY OF ALL CATEGORIES OF EMPLOYEES IN THE STATE GOVERNMENT—*cont.*

MR. SPEAKER : We shall now take up resolutions. The first resolution is that of Sri M. Kalyanasundaram, an unfinished resolution. Last time the hon. Member Sri V. K. Kothandaraman spoke. If the hon. Member Sri N. K. Palanisami wants to speak, he can speak now.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் 27–8–58-ம் தேதியில் ஒரு ஜி.ஓ. போட்டு, கமர்சியல் டாக்ஸ் டிபார்ட்மெண்ட் உத்தியோகஸ்தர்களில், வேலைசெய்துகொண்டிருந்த 243 ப்யூன்களையும், 140 லோயர் டிவிஷன் கிளார்க்குகளையும், 14 பில் கலெக்டர்களையும், அக்டோபர் 1-ம் தேதியிலிருந்து வேலையிலிருந்து நீக்கியிருக்கிறார்கள். ஏ.ஸி.டி.ஓ., டி.ஸி.டி.ஓ.-க்களுக்கு ப்ரமோஷன் இல்லாமல் மிகவும் அதிருப்திபடுகிறார்கள். அவர்களுக்கு ப்ரோமோஷன் கொடுக்க வேண்டும் என்கிறார்கள். உண்மையாக இதற்குப் பிறகு, ரீ-ஆர்கனைசேஷன் என்ற பெயரால் 175 பேர்கள் இருந்த லோயர் டிவிஷன் கிளார்க்குகளுக்குப் பதிலாக, 135-ஆகக் குறைத்திருக்கிறார்கள் ; டி.சி.டி.ஓ.-வை எடுத்துக்கொண்டால், 145 பேர்கள் இருந்தவிடத்தில், 149-ஆக அதிகமாக்கியிருக்கிறார்கள். அதே நோத்தில், சி.டி.ஓ. கஜட்ராங்கை எடுத்துக்கொண்டால், அதைப் பதினேழிலிருந்து, 37 பேர்களாக உயர்த்தியிருக்கிறார்கள். பதிலாக டெபுடி கமர்ஷியல் ஆபீசர் என்ற முறையிலே ரூ. 800 முதல் ரூ. 1,000 வரை சம்பளத்தில் பதிலாக அபீசர்களை வைத்திருக்கிறார்கள். ஆகவே, ரீ-ஆர்கனைசேஷன் என்ற பெயரில் மேலே இருக்கக் கூடியவர்களுக்கு ப்ரமோஷன் கொடுத்து விட்டு, கீழே இருப்பவர்களை ரிட்ரெஞ்ச் செய்வது நியாயமா என்று கேட்க விரும்புகிறேன். இது இரண்டாவது திட்டத்தின் குறிக்கோளுக்கு விரோதமானது என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

நமக்குத் தெரியும், ஸெண்ட்ரல் பே கமிஷன் 1–1–48-ல் விலைவாசி லீவிங் இன்டெக்ஸ் 260 புள்ளியாக இருந்தபோது, மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கு சம்பளத்தை உயர்த்திக் கொடுக்க வேண்டுமென்று நியமிக்கப்பட்டது. இப்பொழுது விலைவாசிகள் ரொம்பத் தூக்கலாக இருக்கிறது. லீவிங் இன்டெச்ஸ் 407 பள்ளி வரையில் ஏறியிருக்கிறது. அன்றிருந்த நிலையில் இன்றைய தினம் வாங்க முடியாது. பிழைக்க முடியாது. மிகக் குறைந்த சம்பளம் கொடுக்கப்படுகிறது. இதே சமயத்தில், மத்திய சர்க்கார் தங்கள் ஊழியர்களுக்கு முதல் பே கமிஷன் சிபாரிசுப்படி அதிகச் சம்பளம் கொடுத்தது, அதிகப் படியான டி.ஏ.

கொடுத்தது. இப்பொழுது மறுபடியும் இரண்டாவது பே கமிஷன் போட்டிருக்கிறது, தங்கள் ஊழியர்களின் சம்பளத்தை உயர்த்த. இன்னும் அவர்கள் பென்ஷன் ரூல்களை எடுத்துக்கொண்டால், மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு லிபரலைஸ்ட் பென்ஷன் ரூல்கள் என்று வைத்திருக்கிறார்கள். அதன் மூலமாக பழைய பென்ஷன் முறையைத் திருத்தி லம்ப் ஸம்மாக ஒரு கிராண்ட் கொடுக்கிறார்கள். அதன்மேல் கிராசுயிடி என்றும் கொடுக்கிறார்கள். இங்கே என்ன செய்கிறார்கள் என்றால், ரூபாய்க்கு ஒன்பது பைசா அவர்கள் கொடுக்க வேண்டும், இவர்களும் அதேத் தொகையைக் கொடுக்கிறார்கள். மத்திய சர்க்கார் வைத்திருக்கக்கூடிய லிபரலைஸ்ட் பென்ஷன் ஸ்கீமை நம் சர்க்காரும் ஏன் ஏற்படுத்தக்கூடாது என்று கேட்கிறேன். இன்னும், மைசூர், ஆந்திரா, கேரளா போன்ற அரசாங்கங்கள், பே ரிவிஷன் கமிட்டி என்று ஏற்படுத்தி, பரிசீலனை செய்து, தங்கள் தங்கள் சிப்பந்திகளின் சம்பளத்தை உயர்த்தியிருக்கிறார்கள். நம் சர்க்கார் சொல்வது என்ன ? இரண்டாவது பே கமிஷன் சிபாரிசுகள் வரட்டும், அதற்குப் பிறகு பார்க்கலாம் என்கிறார்கள். மைசூர், ஆந்திரா போன்ற சர்க்கார்கள் தங்கள் பே ரிவிஷன் கமிட்டியின் அடிப்படையில் சிபாரிசுகளை மத்திய சர்க்கார் இரண்டாவது பே கமிஷனுக்கு சமர்ப்பித்து விட்டார்கள். நம் சர்க்காரும் நினைத்திருந்தால், அம்மாதிரி ஒரு பே ரிவிஷன் கமிட்டி போட்டு சிப்பந்திகளின் சம்பளத்தை உயர்த்த வழி செய்திருக்க முடியாதா என்று கேட்க விரும்புகிறேன்.

இன்றைய தினம் என்.ஜி.ஓ.-க்கள் அதிருப்தி அடைந்திருக்கிறார்கள். சமீபத்தில் சேலம் மகாநாட்டில் கூட, போதுமான சம்பளம் கொடுக்கப்படவில்லையென்றால், வேலை நிறுத்தம் செய்வோம் என்று தீர்மானித்தது நமக்குத் தெரியும். ஆகவே, இன்னும் காலதாமதம் செய்தால், மிக அதிருப்தியான நிலைமை ஏற்படக்கூடும் என்பதைச் சொல்ல விரும்புகிறேன். போதுமான எபிஷன்ஸி இல்லை என்று சொல்லப்படுகிறது. நான் சொல்வது என்னவென்றால், அவர்களுக்கு எபிஷன்ஸி இருக்கிறது. ஆனால் அவர்களுக்குப் போதுமான சம்பளம்தான் இல்லை.

நாம் இரண்டாவது திட்டம் போட்டு நடத்தி வருகிறோம். அந்த திட்டத்தை நிறைவேற்றியாக வேண்டும். அதில் அவர்களுடைய பங்கு மிக முக்கியமானது. திட்டத்தை சரிவர நடத்த அவர்களுக்கு ஊக்கமும் உணர்ச்சியும் நாம் அளித்தாக வேண்டும். ஆகவே, அவர்களுடைய சம்பளத்தை எந்த அளவுக்கு, விலைவாசிகளின் உயர்வை அனுசரித்து, மத்திய சர்க்கார் சிப்பந்திகளின் சம்பளத்தையும் அனுசரித்து, உயர்த்த வேண்டும் என்பதை உடனடியாகக் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI K. SATTANATHA KARAYALAR :** சபா நாயகர் அவர்களே, நமது சர்க்காரிலே, கடைநிலை ஊழியர்களாக இருக்கக் கூடியவர்களுடையவும், அவர்களோடு ஸெக்ரடேரியட்டில் உள்ள ஊழியர்களுடையவும் நிலை நீண்ட நெடு நாட்களாக இந்த சபையிலே, கேள்வி நேரத்திலும், மற்றும் பல சந்தர்ப்பங்களிலும், அங்கத்தினர்களால் கொண்டுவரப்பட்டுள்ளது. ஆனால், சர்க்கார், திரும்பத்திரும்ப ஒரே பதில்தான் தருகிறது, " போதுமான நிதியில்லை " " போதுமான நிதியில்லை " என்று. அவர்களுடைய கோரிக்கை நியாயமானது என்று எல்லோரும் ஒப்புக் கொள்கிறோம். விலைவாசி உயர்ந்துகொண்டே இருக்கிறது என்பதும் எல்லோருக்கும் தெரிந்ததே. இருந்தும், மீண்டும், மீண்டும், திரும்பத் திரும்ப இதையே சொல்லிக்கொண்டு இருக்கிறோமே தவிர, உருப்படியாக ஒரு நன்மையும் செய்யவில்லை.

கழிந்த இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ரூ. 12 டி.ஏ. உயர்த்திக் கொடுத்தார்கள். அதில் சரிபாதி பங்கு மத்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டது. இதையே ஒரு பேஸ்ட் ப்ரோக்ராமாக வைத்துக்கொண்டு, இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை பத்து ரூபாய் டி.ஏ.-யில் உயர்த்திக் கொடுக்கக்

கூடிய திட்டம் எதுவும் சர்க்காரிடம் இல்லே. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் தீட்டியிருக்கிறோம். அந்த திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பு, இந்த சட்ட சபையிலே உள்ள அங்கத்தினர்களுக்கு எந்த அளவுக்கு இருக்கிறதோ, அதைப் பார்க்கிலும் மிகப் பெரிய பொறுப்பு, நிர்வாகத்திற்கு, நிர்வாகத்திலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு இருக்கிறது.

இப்பொழுது இருக்கக்கூடிய அளவில் அவர்கள் நிரந்தரமான அதிருப்தியுடன் இருக்க விட்டுவிட்டு திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்றால் அது மேலும் மேலும் பலவிதமான சிக்கல்களைத்தான் உண்டு பண்ணும். அந்நிலமை பல சிக்கல்களிலும் ஊழல்களிலும்தான் கொண்டுபோய் விடும். குறிப்பாக ஒன்றிரண்டு விஷயத்தை கவனித்தால் அது எந்த அளவுக்கு அது நமது நிர்வாகத் திறமை குறைவுக்கு காரணமாக இருக்கிறது என்பது தெரியவரும். இது போன்ற அதிருப்தி காரணம்தான் அப்படிப்பட்ட நிர்வாக திறமை குறைவுக்குக் காரணம் என்று தெட்டத் தெளிவாகக் கூறலாம். 3.40 p.m.

இப்பொழுது கம்யூனிட்டி டெவலப்மெண்ட் ப்ராஜெக்டை எடுத்துக்கொண்டால் பலரும் திரும்பத் திரும்பக் குறிப்பிட்டது ஒன்றுதான். அதாவது அதிலுள்ள நிர்வாக ஊழல். அந்த திட்டத்தின் மூலமாக விவசாயக் கடன் விநியோகிக்கப்படுகிறது. குறிப்பாக ஒரு ப்ளாக் டெவலப்மெண்டை எடுத்துக் கொண்டால், அதாவது திருப்பத்தூர் ப்ளாக் டெவலப்மெண்டை எடுத்துக்கொண்டால் அங்கே சுமார் $1\frac{3}{4}$ லட்சம் ரூபாய் கடனுக விநியோகம் செய்யப்பட்டுள்ளது. அப்படி விநியோகம் செய்வதற்கு ஏற்படுத்திய உத்யோகஸ்தர்களுடைய சம்பள செலவு சுமார் ஒரு லட்சம் ரூபாய்க்கு வந்திருக்கிறது. நிரந்தரம் ஆகாதவர்கள் (டெம்பரரி ஸ்டாப்) கடன் கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அப்படி விநியோகம் செய்வதில் அவர்கள் கால தாமதம் செய்தால் அவர்களுக்கு நீண்ட நாட்கள் உத்யோகம் இருக்கும் என்று நினைக்கிறார்கள்.

பல இடங்களில் ஆறு மாதங்களுக்கு அதிகமாகவும் வேலை செய்து கொண்டிருக்கிறவர்கள் நிரந்தரமாக்கப்படாமல் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களை நிரந்தரமாக்கப்படவேண்டும். அப்பொழுதுதான் அவர்களுக்கு ஊக்கம் ஏற்பட்டு வேலை செய்வதற்கும் உற்சாகம் ஏற்படும். நிரந்தரம் ஆக்கப்படாவிட்டால் வேலை முடிந்தவுடன் தங்களுக்கு வேலை போய் விடுமோ என்ற அச்சத்தால் தங்களுடைய வேலையில் சரியானபடி கவனம் செலுத்தாமல் காலதாமதமும் செய்வார்கள். அதனால் அவர்களை அதாவது ஆறு மாதங்களுக்குமேல் வேலைசெய்து வருபவர்களை உடனடியாக நிரந்தரமாக்கப்பட வேண்டும். அப்படிப்பட்ட ஒரு திட்டமும் இருக்க வேண்டும்.

சர்க்காரில் இப்பொழுது எவ்வளவோ போஸ்டுகள் இருக்கின்றன. அவைகள் எல்லாம் இன்னும் நிரந்தரமாக்கப்படாமல் இருக்கின்றன. அவைகள் டெம்பரவரியாகவே பல ஆண்டுகள் தொடர்ந்து இருந்து வருகின்றன. இப்படிப்பட்ட போஸ்டுகள் நிரந்தரமாக்கப்படாமலேயே இருப்பதால் அவைகளில் வேலை செய்துவரும் உத்தியோகஸ்தர்களுக்கு தங்களுக்கு எப்பொழுது வேலைபோய்விடுமோ என்ற அச்சம் இருந்து கொண்டேவருகிறது. மற்றும் அவர்களுக்கு தாங்கள் எவ்வளவு நாட்கள் தான் வேலையில் இருக்கப்போகிறோமோ என்ற சந்தேகமும் இருந்து வருகிறது. அதனால் அவர்கள் தங்களுடைய வேலையை எப்படியாவது நீட்டிக் கொண்டே போகவேண்டும் என்ற எண்ணத்தில் நீட்டிக்கொண்டே போகிறார்கள். திட்ட வட்டமாக ஒரு வேலையைச் செய்யவேண்டும் என்று நினைப்பது இல்லை.

அடுத்தபடியாகப் பார்க்கப்போனால் இன்றைக்கு உத்யோகங்களில் ப்ரொமோஷன் கொடுக்கும் முறையில் ஸ்ட்ரிக்ட் சீனியாரிட்டியை கவனித்துக் கொடுத்தால் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படும். அது இல்லாது சீனியா

ரிட்டியை பின் தள்ளிவிட்டு அல்லது யாருக்குக் கொடுக்க வேண்டுமோ அவருக்குக் கொடுக்காமல் சுமார் இருபது அல்லது முப்பது பேர்களுக்குப் பின்னால் இருக்கக்கூடியவருக்கு ப்ரோமோஷன் கொடுத்தால் அவருக்கு வேலை செய்வதற்கு எப்படி நம்பிக்கையும் ஊக்கமும் ஏற்படும்? அப்படி அவர்களுக்கு ப்ரோமோஷன் கொடுக்காமல் இருப்பதால் அவர்கள் நம்பிக்கை இழந்து மேலும் அதிருப்தி அடைகிறார்கள். இப்படியும் ஒருபுரத்தில் அவர்களுக்கு அதிருப்தி ஏற்படுகிறது.

அடுத்தபடியாக செலெக்ஷன் க்ரேட் வைத்திருப்பதிலும் ஒரு திட்டம் இருக்க வேண்டும். செலெக்ஷன் கிரேடில் Seniormost ஆட்களுக்குத் தான் ப்ரமோஷன் கொடுக்க வேண்டும். அந்தப் பழக்கத்தை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும். அப்படி சீனியர்மோஸ்டாக இருக்கிறவர் தகுதியற்றவராக இருப்பதாகக் கருதினால் அதற்கு அடுத்தபடியாக இருக்கக் கூடியவரை நியமிக்கவேண்டும். அப்படி இல்லாமல் வெளியிலிருந்து கொண்டு வந்து நியமிப்பது என்றால் அது சரியில்லை. ஆனால் இப்பொழுது பார்த்தால் திடீர், திடீரென்று நியமிக்கிறார்கள். பொதுவாக இதைப் பார்த்தும் என்.ஜி.ஓ.-க்களுக்கு அதிருப்தி ஏற்படுவதற்கும் காரணமாக இருக்கிறது.

என்.ஜி.ஓ.-க்கள் வேலை செய்கிறார்கள், அவர்களுக்கு நாம் சம்பளம் கொடுக்கிறோம். அவர்கள் சம்பளம் வாங்கி வருவதால் அவர்களுக்கு மாத்திரம் என் சங்கம் இருக்கக்கூடாது. என்.ஜி.ஓ.-க்கள் சங்கம் மாவட்ட ரீதியிலும் அங்கீகரிப்படவேண்டும். அப்போதுதான் அவர்கள் தங்களுடைய குறைகளை எடுத்துச் சொல்லுவதற்கு வசதியாக இருக்கும். கூலி உயர்வு வேலைப்பளு போன்றவைகளையும் எடுத்துச் சொல்வதற்கு வசதியாக இருக்கும். இது அவர்களுடைய ஜீவாதாரப் பிரச்னையாகும். இது போன்ற வாழ்க்கை பிரச்னையை கவனித்தால்தான் அவர்களும் மக்களுக்கு சேவை செய்கிறோம் என்ற மனப்பான்மையில் இருக்கமுடியும். அந்த அடிப்படையில் அவர்களுக்கு வேண்டிய வசதிகளை நாம் செய்துகொடுத்து அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறவேண்டும்.

சோஷலிச அடிப்படையில் நாம் இப்பொழுது இயங்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கக்கூடிய நேரத்தில் இப்பொழுது நாம் டிஸ்டிரிக்ட், தாலுகா லெவலில் பல திட்டங்கள் நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. தேசீய அபிவிருத்தி திட்டம், போன்றவைகளை நாம் நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. அதற்கு அவர்களுடைய ஆலோசனைகளைக் கேட்டு நாம் வேலைகளைச் செய்யவேண்டியதாக இருக்கிறது. அவர்களை நாம் கலந்து கொண்டு திட்டங்களை நிறைவேற்ற வேலை செய்தால் எவ்வளவோ நன்மையாக இருக்கும். இதைத்தவிர நமது சட்டசபையில் பல திட்டங்களை நாம் போடுகிறோம். அவைகள் எல்லாம் அவர்களுடைய ஆலோசனையும் ஒத்துழைப்பின்பேரில்தான் நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. இவைகளை நிறைவேற்றுவதில் அக்கரை காட்டுவதற்கு நாம் அவர்களுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவர்கள் மனது இல்லாமல் வேலை செய்தால், அதனால் எந்த விதமான பலனும் நமக்குக் கிடைக்காது. அவர்கள்தான் மக்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறார்கள். அவர்களை திருப்திப்படுத்துவதுதான் மிக மிக முக்கியம். ஆதலின் பண நெருக்கடி என்ற காரணத்தைக் காட்டி அவர்களுக்கு சம்பளத்தை உயர்த்தாமல் இருப்பது மிகவும் தவறாகும். நிதி சம்பந்தமாக எப்படிப்பட்ட நெருக்கடி இருக்கிறது என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும். அதை அவர்கள் அறியாதவர்கள் அல்ல. ஆனால் அதை எப்படி நிவர்த்திக்க முடியும் என்பதும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். என்.ஜி.ஓ.-க்கள் இப்படிப்பட்ட கோரிக்கையை கேட்டுக்கொண்டிருப்பது சமீபத்தில் ஒன்று அல்லது இரண்டு வருஷங்களாக மாத்திரம் அல்ல. அவர்கள் பனிரெண்டு வருஷங்களாகத்தான் பொறுத்துக் கொண்டே வந்திருக்கிறார்கள். அவர்களுடைய பொருமையைச் சோதிப்ப

தற்கும் ஒரு எல்லே உண்டு. அவர்கள் எந்த அளவிற்கு தேச பக்தியுடன் பணியாற்றி வருகிறுர்கள் என்பதை நாம் கொஞ்சம் கவனிக்க வேண்டும். ஆகவே அவர்களுக்கு நம்பிக்கை கொடுக்கும் அளவில் திட்ட வட்டமாக சில காரியங்களைச் செய்தாக வேண்டும். பல விதத்தில் வரும்படியை தேடி கொண்டு அவர்களுக்கு ஏதாவது செய்வதற்கு முற்பட வேண்டும். அதற்கு வேண்டிய வழிகளைக் கண்டுபிடித்து அவர்களுக்கு ஏதாவது செய்வதற்கு முன்வரவேண்டும்.

நமது ராஜ்யத்தில் ஆயிரம் ரூபாய்க்கு அதிகப்படியாக சம்பளம் வாங் கக்கூடியவர்கள் சுமார் 45 பேர் இருக்கிறுர்கள். அவர்களுக்குக் கொடுக் கக்கூடிய சம்பளத்தில் கொஞ்சம் எடுத்து, குறைந்த சம்பளம் இவ்வளவு தான் என்று நிர்ணயம்செய்து, அதற்கு அதிகப்படியாக இருப்பதை எடுத்து, என்.ஜி.ஒக்களுக்குப் பகிர்ந்து கொடுத்தால், ஒரு ஆளுக்கு நாலணு கூட கிடைக்காது என்று கனம் அமைச்சர் அவர்கள் ஒரு சந்தர்ப் பத்தில கூறினுர். இப்படிச் செய்வது சம்பள உயர்வுக்காக அல்ல. அதிக சம்பளத்திற்கு வரம்பு கட்டுவதன் மூலம் அடித்தட்டில் உள்ளவனுக்கு நம்பிக்கையூட்டுவதற்காக. மந்திரிகள் சம்பளத்தையும் மேல் உத்தியோ கஸ்தர் சம்பளத்தையும் குறைப்பதன் மூலம் நாம் குறைந்த வருவாயில் உள்ளவரையும் தியாகம் செய்ய தூண்டியவர்கள் ஆவோம். அதற்கு வேண்டிய சந்தர்ப்பம் நமக்கு இருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு சூழ் நிலேயை உண்டுபண்ண வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன. அதோடு என்.ஜி.ஒ. சம்பளத்தை உயர்த்த அதற்கு வேண்டிய வரும்படியையும் அவசியம் கண்டுபிடித்தாகவேண்டும்.

கழிந்த சில மாதங்களுக்கு முன்பு ஜாயிண்ட் சர்வீஸ் கமிஷனுடைய ரெகமெண்டேஷன் வந்ததாகத் தெரிகிறது. அதன்படி பி.ஏ. படித்த வர்களுக்கு ஐந்து ரூபாய் உயர்த்திக்கொடுக்க வேண்டும் என்று குறிப் பிட்டிருக்கிறுர்கள். அதில் சீப் செக்ரடரி, பைனுன்ஸ் செக்ரடரி போன்ற வர்கள் அங்கம் வகித்திருக்கிறுர்கள். அவர்கள் அதில் இருந்ததால் அவர் களுக்கு நிதி வருவாய் என்ன என்பது நன்ருகத் தெரிந்திருக்கும். அவர்கள் சிபாரிசு செய்திருந்ததையாவது அமுலுக்குக் கொண்டுவந் திருக்கலாம். அவர்கள் நிதி நிலமை தெரியாமல் சிபாரிசு செய்திருக்க மாட்டார்கள். பக்கத்தில் இருக்கும் ராஜ்யமாகிய கேரளாவை எடுத்துக் கொண்டால் அங்கே கணிசமாக சம்பளத்தை உயர்த்திக்கொடுத்திருக்கிறுர் கள். இன்னும் பக்கத்திலுள்ள ஆந்திராவை எடுத்துக்கொண்டாலும் அங் கேயும் ஒரு கமிட்டியை அமைத்திருக்கிறுர்கள். என். ஜி. ஒககளுக்கு நம்பிக்கை வரக்கூடிய அளவில், அவர்களுக்கு உத்சாகத்தை தூண்டக் கூடிய அளவில் ஒரு கமிட்டியை அமைத்து அவர்கள் செயல்படுகிறுர்கள். அந்த அடிப்படையில்தான் நண்பர் கலியாணசுந்தரம் அவர்கள் ஒரு தீர்மானம் கொடுத்திருக்கிறுர். அந்த அடிப்படையில் ஒரு கமிட்டியை அமைத்தால் ஓரளவு இங்குள்ள என்.ஜி. ஒக்களுக்கு நம்பிக்கை ஏற்படும். நம்பிக்கை வரக்கூடிய அளவில் அவர்கள் பணியாற்றுவதற்கு உதவியாக இருக்கும். அந்தக் கமிட்டி நிதி நிலமைகள் எல்லாவற்றையுமே பரி சீலனே செய்யவேண்டும். ஆளுங் கட்சியில் இருக்கக்கூடியவர்களுடைய பிரதிநிதிகளும், எதிர் கட்சியிலுள்ளவர்களுடைய பிரதி நிதிகளும், என். ஜி. ஒக்களுடைய பிரதிநிதிகளும் கொண்ட ஒரு கமிட்டியை அமைத்து, இதைப்பற்றி பரிசீலனே செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டும். பொரு ளாதார நிலமையை பரிசீலனே செய்து எந்த அளவில் அவர்ளுக்கு வசதி செய்துகொடுக்கலாம் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். வாயளவில் செய்யாமல் அவர்களுக்கு நம்பிக்கை வரக்கூடிய அளவில் கவனம் செலுத்தி நம்பிக்கை வரக்கூடிய அளவில் வருவாயை பெருக் கிக்கொள்ள வேண்டும். சாதாரணமாக கவனிக்கிறேம், செய்கிறேம் என்று சொல்லாமல் திட்ட வட்டமாக அவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும். பொறுப்புள்ள அதிகாரிகள் இதில் கவனம் செலுத்த வேண்டும்.

இப்பொழுது ஏதாவது கவனிக்கிறோம், செய்கிறோம் என்று சொல்லி விட்டு பின்னால் கேட்டால் நாங்கள் என்ன அஷூரன்சு கொடுத்தோமா என்று திருப்பிக்கேட்கக்கூடிய மனப்பான்மையில் இருக்கக்கூடாது. அதை விட்டுவிட்டு இந்தப் பிரச்னையை சமாளிப்பதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்ய முன் வரவேண்டும். இதற்கு வாய்ப்பு எப்படி இருக்கிறது, வசதி எப்படி இருக்கிறது என்பதை பரிசீலனை செய்து ஒரு கமிட்டியை அமைக்க முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

3–50 p.m. SRI S. NAGARAJA MONIGAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த நாட்டிலே ராஜ்யம் நடைபெறுவதற்கு மிக உதவியாக இருக்கும் ஒரு சமூகத்தினரை நல்லபடி நடத்த வேண்டுமென்பதில் யாதொரு ஆட்சேபணையும் கிடையாது. அப்படிப்பட்ட சமூகத்தை நாம் மூன்று விதமாகப் பிரிக்கலாம். அதாவது நடுத்தர வகுப்பினர், மேலான அந்தஸ்து உள்ளவர்கள், பாமர ஏழை மக்கள், என்று மூன்று பிரிவாக ஒருக்கால் பிரிக்கலாம். இதில் அதிகமாக பணக்காரர்களைப்பற்றி ஒன்றும் இந்த சபையில் நாம் அவர்களுடைய வாழ்க்கையைப்பற்றி பேசவேண்டிய அவசியம் அதிகமாக இல்லை என்று நினைக்கிறேன். நடுத்தர வகுப்பின ரைப்பற்றியும், பாமர ஏழை மக்களைப்பற்றியும் நாம் இங்கே பரிசீலனை செய்து அடிக்கடி பேசிக்கொண்டிருக்கிறோம். எதற்கெடுத்தாலும் நாட்டு ஏழை மக்கள் பட்டினியால் வாடுகிறார்கள். தற்கொலை புரிந்துகொள்ளு கிறார்கள் என்று அடிக்கடி இந்த சபையில் தலைவர்களுடையவும் மற்றவர்களுடையவும் கவனத்திற்குக்கொண்டு வந்திருக்கிறோம்.

இதிலே பாமர ஏழை மக்களைப் பற்றி அடிக்கடி இங்கே தினம் சொல் லிக்கொண்டிருந்தாலுங்கூட, அவர்களுடைய முன்னேற்றத்திற்காகத்தான் சுயராஜ்யம் வாங்கியதாக நாம் ஒவ்வொருவரும்—எதிர்கட்சியாக இருந்தா லும்சரி, யாராக இருந்தாலும்சரி, பொது வாழ்க்கையில் இறங்கிப் பேசக்கூடிய ஒவ்வொரு மகனும் சொல்லிக்கொள்ளுகிறோம், செயலாற்று கிறோம் என்றாலும் கூட, நடுத்தர வகுப்பினருடைய நிலைமையைக்கூட கவனிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது, சில காரணங்களால் நடுத்தர வகுப்பினர்களுடைய வாழ்க்கையைப்பற்றிப் பேசி தங்கள் கட்சியை முன் வைத்து சண்டை போட்டு, தங்கள் வயிற்றுச் சோற்றைத் தேடிக்கொள்ளக் கூடிய ஆற்றல் அவர்களுக்கு இருக்கிறது. இந்த ராஜ்யத்தின் முன்னேற் றத்திலே மாபெரும் தலைவர்கள் பங்கெடுத்தது ஒரு பக்கம் இருக்க, அவர் கள் வாங்கித்தந்த சுயராஜ்யத்தை மேம்பட்டு நடத்தி கிடைத்த சுயராஜ்யத்தை நல்லபடி காத்துக்கொள்ளவும், அதன் பலனை எல்லா மக்களும் அடைய வும், முன்நின்று, எப்படி ஒரு நிலத்தைப் பண்படுத்துவதற்கு உழுது பக்குவப்படுத்தவேண்டுமோ அப்படி பண்படுத்துகின்ற பல பணிகளில் பல டெக்னிகல் அதிகாரிகள் முதற்கொண்டு பெரும் சம்பளம் வாங்கும் அதி காரிகள் இருந்தாலுங்கூட, அவர்களுக்கு உறுதுணையாக இடைவேலைகளைச் செய்யக்கூடிய நடுத்தர உத்தியோகங்களிலே, கீழ் உத்தியோகங்களிலே அனேக மக்கள் இருந்து வருகிறார்கள். ஆகவே, அவர்கள் சற்று நன்றாக வாழவேண்டும் என்பதிலே நாம் கவனம் செலுத்த வேண்டியது மிக அவசியமே. ஆனால், அது எந்த அளவு அவசியம், நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம், இந்த சர்க்காரோ அல்லது இதற்கு முன்பு இருந்த சர்க்காரோ அல்லது அகில இந்திய சர்க்காரோ இது விஷயத்தில் அடியோடு பாராமுகமாக இருந்துவந்திருக்கிறதா, தெரிந்தே செய்கின்றதா, தெரி யாமல் செய்கின்றதா என்ற பிரச்னைகளை எல்லாம் கூட நம் போன்ற வர்கள் இங்கே சிந்திக்கவேண்டியவர்ளாக இருக்கிறோம். ஏதோ சாத்தி யக்கூறு கம்மியாக இருப்பதினாலோ, இதைக்காட்டிலும் வேறு சில முக்கிய மான அலுவல்களினாலோ, தேவைகளினாலோ, இது ஒரு சிறிதளவு பூரா வும் கைவிடப்பட்டது, மறுக்கப்பட்டது, என்று சொல்ல முடியாது, சொல்லமாட்டேன், மற்றொருவர் சொன்னாலும் ஒப்பமுடியாது. ஏதோ ஒரு சிறிதளவு அந்த வகையிலே இன்னும்கூட கொஞ்சம் செய்யலாம்.

30th September 1958] [Sri S. Nagaraja Monigar]

ஆனால், அது சாத்தியமாக உடனடியாகச் செய்ய ஏன் முடியவில்லை என்பதை ஒரு மந்திரி சபையல்ல பல மந்திரி சபைகளும், பல கட்சிக்காரர்களும் இதைக் கவனித்துத்தான் வருகின்றனர்.

இந்த உத்தியோகஸ்தர்களுடைய எண்ணிக்கை பெரிய அதிகாரிகளைப் போல் அல்ல. சுயராஜ்யம் வந்த பின் பல இலாகாக்கள் புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இருக்கும் இலாகாக்களில் சிப்பந்திகள் எண்ணற்றவர்களாகிவிட்டார்கள். ஆகவே, இவர்களுக்கு ஒரு சிறிது உதவுவதானாலுங்கூட, மொத்த தொகை அதிகமாக ஏற்படுகிறது. அதை உடனடியாகச் செய்ய வேண்டிய அளவுக்கு, அந்த அளவு அவசியம் இருக்கிறதா, அதற்கு வேண்டிய பணத்தை எடுக்க முடியுமா, இதைக் காட்டிலும் அந்தப் பணத்தைக்கொண்டு செய்ய வேண்டிய மேன்மையான, அதி அவசியமான செலவுகள் இருக்கின்றனவா என்பதை இந்தச் சபை சிந்திக்காவிட்டால் வேறு யாரும் சிந்திக்க முடியாது. ஆகவே, இந்த அவசியத்தைக் கருதி, என். ஜி. ஓ. என்று சொல்பவர்களுக்கு ரூபாய் 12 வரையிலும் அதிகமாக கொடுக்கப்பட்டிருக்கிறது. ரூபாய் 40 சம்பளம் வாங்குபவர்களுக்கு ரூபாய் 12 வரையிலும் கொடுத்திருந்தால், நான்கில் ஒரு பங்குக்குமேல் அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது. மேலும் அதிகம் செய்யவும், அவ்விதமாக வேலைகளும் நடந்து வருகின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. இவர்களிலேகூட இன்னும் அதிகப் பேருக்குக் குறைந்த சம்பளம் இருக்கிறது. அந்தந்த இலாகாவுக்கு அந்தந்த வேலைக்குத் தக்கபடி ஊதியம் அளிக்கப்படுமே அல்லாமல், எல்லோருக்கும் ஒரே அளவு கொடுப்பது சாத்தியமா என்பதும் இயலாத காரியம். அப்படிப் பார்க்கின்றபோது லஞ்சம் லஞ்சம் என்று சர்க்கார் இலாகா மிக மோசமாக போய்க்கொண்டிருக்கிறது என்று சொல்லும்படியான ஒரு முக்கியமான நிலை இருக்கிறது. அதை நம்பித்தான் நாம் வாழவேண்டும்.

சாதாரணமாக போலீஸ் இலாகா இருக்கிறது. நாமே ஏதாவது ஒரு இடைஞ்சலில் சிக்கிக்கொண்டால், நம்மையும் அறியாமல் சிலர், "நீங்கள் வாங்கிக்கொண்டாவது என்னை விட்டுவிட்டால் தேவலை" என்று சொல்லக்கூடிய சந்தர்ப்பங்கள் எத்தனையோ இருக்கலாம். வலிய லஞ்சம் கொடுத்துப் பழகக்கூடிய சில இலாகாக்கள் இருக்கின்றன. ஆனால், அத்தகைய பொறுப்பு வாய்ந்த, லஞ்சம் வாங்காமல் இந்த நாட்டினுடைய காவலை நன்றாகச் செய்து நாட்டைத் திறம்பட பாதுகாக்கவேண்டிய போலீஸ் இலாகாவிலே சாதாரண போலீஸ்காரர்களுக்கும், சப்-இன்ஸ்பெக்டர்களுக்கும் சம்பளம் கொடுப்பதைப் பார்த்தால் மிக மிகக் குறைவானது. ரூபாய் 60, 80 என்று ஒரு சப்-இன்ஸ்பெக்டர் சம்பளம் வாங்கிக் கொண்டு தன்னுடைய தொழிலை ஆரம்பிக்கிறார் என்றால், அவர் எந்த அளவு மிக்க பொறுப்பேற்று நல்ல பெரும் பணியைச் செய்ய முடியும் என்பதை யோசிக்க வேண்டும். அவருக்கு இருக்கும் ஆபத்துக்கள், இடைஞ்சல்கள் எத்தனையோ. எத்தனை போலீஸ்காரர்கள் பெரிய கூட்டங்களிலும், பெரிய தகராறுகளிலும் சண்டைகளிலும் உயிரை இழந்திருக்கிறார்கள், என்று எண்ணிப்பார்க்கும்போது, இப்படி அவர்கள் செய்யும்படியான பணி ஒன்றுக்கொன்று வெகு வித்தியாசம் காட்டக் கூடியதாக இருக்கிறது. அங்கே பல தரப்பட்ட இலாகாக்கள் இருக்கும் போது எல்லாவற்றுக்கும் ஒரே மாதிரியாகச் செய்துவிட முடியாது.

இன்னும், உபாத்தியாயர்கள், மிகத் திறமையாக நமது வருங்கால சமுதாயத்தை உருவாக்குகின்ற உபாத்தியாயர்களுடைய வயிறு பட்டினியாக வாடிக்கொண்டிருக்கும் சமயத்தில் தன்னுடைய வீட்டிலே குழந்தை குட்டிகளுக்கும் கல்யாணம் செய்வது போன்ற பலவித சூழ்நிலையில் பள்ளிக்கூடங்களில் வந்து பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிகொடுத்து எதிர் கால சமுதாயத்தை எந்த முறையில் உருவாக்க முடியும் என்று

யோசித்துப்பார்க்கவேண்டும். உபாத்தியாயர்களைப் போன்றவர்களுக்கு சம்பளத்தை உயர்த்துவதென்றால், அவர்களுடைய எண்ணிக்கையைக் கணக்கிட்டுப் பார்த்தால், அதற்கு அளவற்ற தொகை வேண்டும்.

அதைப்போலவே, கிராமாதிகாரிகள் பல வருஷங்களாகவே சம்பளம் போதவில்லை என்றுச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அனேக வேலைகளை அவர்கள் செய்கிறார்கள். இந்த அரசாங்கத்தின் அஸ்திவாரமாக அவர்கள் இருக்கிறார்கள். இப்படிப் பல சாரார்களுக்கு இன்னும் அதிகமான சம்பளம் கொடுக்கவேண்டியிருக்கிறது. இதை மறுக்க முடியாது. ஆனால், அவர்களுக்கும் ஓரளவு கொடுத்து, இன்னும் அதிகம் கொடுக்க முயற்சி செய்துகொண்டிருக்கிறோம். இவ்வளவு நாம் கொடுக்கின்றபோது, இன்னும் கொடுக்கவேண்டுமென்றால், நமக்கு என்ன சுயராஜ்யம் வந்தவுடனே பாலும் தேனுமா ஓடிவிட்டது, எடுத்து எடுத்துக் கொடுத்துக்கொண்டிருப்பதற்கு. சுயராஜ்யம் வந்த பிறகு, இந்த நாட்டை மிக மேம்பாடான நிலையில் கொண்டுவரவும், மக்களுடைய வாழ்க்கைத் தேவைகளையெல்லாம் நீக்கி, அவர்களுடைய குறைகளைக் கேட்டு ஒன்றுகூட நாம் காணாத முறையில், அவர்களை சந்தோஷமாக வசிக்கச் செய்ய வேண்டுமென்றுதான் நாம் பல திட்டங்களைப் போட்டுக்கொண்டிருக்கிறோம். ஆனால் குறைகளே இல்லாத நிலைமையில் வைக்கக்கூடிய அளவுக்கு நாம் வந்துவிட்டோமா என்பதை நன்றாக சிந்தித்துப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கின்றபோது, இன்னும் இருக்கின்றன. தற்கொலைப் புரிந்துகொள்கிறவர்கள், வேலையில்லாத்திண்டாட்டத்திலே ஈடுபட்டிருப்பவர்கள், சாதாரணமாக கிராம விவசாய வேலை செய்வதற்குக்கூட சந்தர்ப்பம் இல்லாமல் திருவண்ணாமலை, செங்கம் போன்ற இடங்களில் சாமை அறுப்பதற்கும், கடலைக்காய் வெட்டுவதற்கும்கூட சந்தர்ப்பம் இல்லாமல், கூட்டம் கூட்டமாக இரவில் பிச்சை எடுத்துச் சாப்பிடக்கூடிய சமுதாயம் நாட்டில் அதிகமாக இருந்துகொண்டிருக்கும்போது, ஏதோ ஓரளவாவது படித்து, படித்தவுடனே வேலையில்லாத் திண்டாட்டம் என்ற கூச்சலைக் காணும்போதெல்லாம், உடனே ஏதாவது ஒரு வேலையைக் கொடுத்து, ரூபாய் 30, 40, 80 என்று ஏதோ சம்பளம் கொடுத்து அரை வயிற்றுக் கஞ்சியாவது சாப்பிடுவதற்கு ஒரு வழி செய்து வைத்திருக்கும்போது, இந்த நாட்டில் படித்திருப்பவர்களுக்கும் படிக்காமலிருப்பவர்களுக்கும் வேலை வாய்ப்பு அளிக்க

4·00 p.m. வழி செய்ய வேண்டிய பெரும்பங்கு நமக்கு இருக்கிறது. நாம் சுகமாக வாழும் காலநிலையில் இன்றைக்கு உத்தியோகம் பார்க்க வரவில்லை. நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற சூழ்நிலையில் உத்தியோகத்தில் இருக்கிறோம் என்று நினைத்து, நாமும் நம்மாலான ஒரு தியாகத்தைச் செய்துதான் ஆக வேண்டும். பத்து, இருபது ஆண்டுகளுக்கு, அதுவும் இந்த நாடு முன்னேறும் வரையில், பின்னால் வரும் நம் இளம் கூட்டத்திற்கு, வருங்கால சந்ததியாருக்கு இந்த நாட்டை நன்றாக அமைக்க வேண்டுமென்ற கருத்தோடு, அவர்களும் ஓரளவு சிறிது தியாகம் செய்துதான் பத்து, இருபது ஆண்டுகள் வாழவேண்டுமே தவிர, அதை மறந்து இருப்பது சரியல்ல. பஸ் நிலையத்திலும், ரயில் நிலையத்திலும் இன்னும் எங்கு பார்த்தாலும் பிச்சைக்காரர்கள் கேட்பாரற்ற நிலையில், திக்கற்ற நிலையில், கையிழந்த நிலையில், நொண்டியாய், முடமாய், எண்ணற்ற மக்கள் இந்த நாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கும் நிலையில், எதற்கெடுத்தாலும், அதிகம் அதிகம் என்று கேட்டுக்கொண்டிருந்தால் என்ன ஆவது? அதிகம் கொடுக்கவேண்டும் என்ற எண்ணத்தை மாத்திரம் ஏற்றுக்கொள்ளலாமே அல்லாமல், தெரிந்தோ தெரியாமலோ இம்மாதிரி அடிக்கடி ஈடுபட்டுச் செய்கின்ற அவர்கள், அந்த நிலையில் உள்ளவர்கள் ஏதோ வருகின்றது என்றால், யாரும் வேண்டாமென்று சொல்லமாட்டார்கள். அவர்கள் திறமையாக செயல்படுவதற்கு ஊக்கம் கொடுக்க வேண்டும் என்பது உண்மைதான். அவர்களுடைய நிலைமையை நன்றாக உணர்ந்து அவர்களுக்குச் சம்பளத்தை அதிகப்படுத்த வேண்டுமென்பதை சர்க்கார் உணர்ந்து பலவகையான காரியங்களைச் செய்து கொண்டிருக்கும்போது அவர்கள் கிளர்ச்சியில் ஈடுபடுவதும் அல்லது எதிர்கட்சிக்

காரர்கள் இந்த மாதிரியான ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து பிரேரிப்பதும் சரியல்ல என்றுதான் நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த விஷயத்தில் எல்லோரும் அரசாங்கத்துடன் ஒத்துழைத்து, அவர்கள் கிளர்ச்சியில் ஈடுபடத் துடித்தாலும் "அப்படிச் செய்யக்கூடாது, நம் சர்க்கார் உங்கள் விஷயத்தில் அதிக அக்கறையுடன் செயல்பட்டு வருகிறது" என்பதாகச் சமாதானமாகச் சொல்ல வேண்டிய பொறுப்பு உடையவர்களாக நாம் இருக்கிறோம். அந்தப் பொறுப்பைச் செய்வதுடன் நம்முடைய நிதி நிலைமைக்கு ஏற்ப அவர்களுடைய கஷ்டத்தைப் போக்குவதற்கு முயற்சி செய்ய வேண்டியது அவசியமே தவிர, இப்போது இத்தகைய ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து வலியுறுத்துவது அவசியம் அல்ல என்று சொல்லி என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**Sri V. S. MANICKASUNDARAM**: கனம் சபாநாயகர் அவர்களே, நமது சென்னை ராஜ்யத்திலுள்ள கெஜட் பதிவியில்லாத உத்தியோகஸ்தர்களுடைய பொருளாதார நிலைமை நாம் எல்லோரும் பெருமைப்படக் கூடிய நிலையில் இல்லை என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் அவர்களுடைய நிலைமைதான் ரொம்பவும் பிற்போக்காக இருக்கிறது என்று நினைத்துக்கொள்வது நியாயம் இல்லை. இரண்டாவது மகாயுத்தத்திற்கு முன்னால் இருந்த நிலைமையையும், இன்றைக்குள்ள நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்த்தாலும்—அந்தக் காலத்தில் நம்முடைய பெற்றோர்கள் நமக்கு எவ்வளவு வசதிகளும், சௌகரியங்களும் செய்து கொடுத்தார்களோ அதில் பத்தில் ஒரு பங்கைக்கூட இன்றைக்கு நாம் நம் குழந்தைகளுக்குச் செய்து கொடுக்க முடியாத நிலைமையில்தான் இருக்கிறோம் என்பதையும் நாம் ஒப்புக் கொண்டாக வேண்டும். இதில் எந்த விதமான அபிப்பிராய பேதமும் நம் யாரிடத்திலும் இருக்க நியாயம் இல்லையென்று கருதுகிறேன். வாழ்க்கை நிலை உயர்ந்து, வாழ்க்கைத் தேவை அதிகப்பட்டுக் கொண்டு வருவதால் இன்றைக்கு பொதுவாக எல்லா மக்களும் கஷ்டப்பட்டுக் கொண்டு தான் இருக்கிறார்கள்.

நம்முடைய ராஜ்ய கெஜட் பதிவில்லாத சிப்பந்திகளுடைய நிலைமையை நாம் உணராமல் இல்லை. அவர்களுடைய கஷ்டத்தை நீக்குவதற்காக நாமும் பலவிதமான சௌகரியங்களை செய்து கொடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் நம்முடைய பிராந்தியத்திலேயே அருகாமையிலேயே இருக்கிற மத்திய அரசாங்க குமாஸ்தாக்களுக்குக் கொடுக்கப்படுகிற சம்பளத்தோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது நம் ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளுக்குக் கொடுக்கும் சம்பளம் குறைவாகத்தான் இருக்கிறது. இப்படி இவர்கள் சம்பளம் ஏற்றத்தாழ்வாக மிக அதிக அளவில் இருப்பது சரியல்லை என்பதும் உண்மைதான். இவை ஒரே வகையில் இருக்கவேண்டும் என்பதிலும் மாறுபாடு இருக்க நியாயம் இல்லை. ஆனால் இன்று நாட்டில் கெஜட் பதிவில்லாத ஊழியர்கள்மட்டும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பது போல எண்ணி அதற்காக ஒரு கிளர்ச்சி, இந்தச் சபையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்திருப்பது ஆகிய காரியங்கள் சரியென்று எனக்குத் தோன்றவில்லை. நம் நாட்டில் மற்ற துறையில் ஈடுபட்டு இருக்கிறவர்களுடைய நிலைமையையும் கருத்தில்கொண்டு இந்தப் பிரச்னையைக் கவனிக்கவேண்டுமென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இந்த நாட்டில் பெரும்பகுதி மக்கள் விவசாயத் துறையில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது யாவருக்கும் தெரிந்ததே. அவர்களுடைய நிலைமை இன்றைக்கு எப்படி இருந்து கொண்டிருக்கிறது என்பதையும் நாம் கவனிக்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். இந்த நாட்டு மக்களுடைய பொருளாதார நிலையை உயர்த்துவதற்கு நாம் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்துவதில் நியாயம் இருக்கிறது.

இந்த நாட்டு ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளை நமது சர்க்காரும் கவனிக்காமல் இல்லை. இவர்களுக்கு எந்த எந்த வகையில் எல்லாம் சௌகரியங்களைச் செய்து கொடுக்கலாம் என்பதைக் கண்காணிப்புடன் கவனித்துக் கொண்டுதான் வருகிறார்கள். அதற்காக மத்திய சர்க்காருடன் தொடர்பு கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமையை உயர்த்துவதற்கு எந்த சந்தர்ப்பத்திலும் சர்க்கார் தயாராக இருக்கிறது என்பதை உணர்ந்துள்ள நாம் இப்படிப்பட்ட தீர்மானத்தை இந்தச் சபையில் வற்புறுத்துவதில் நியாயமில்லை.

கெஜட் பதிவில்லாத ஊழியர்களுடனே அந்தரங்கமாக நான் கலந்து உறவாடுவதற்குச் சந்தர்ப்பம் இருந்திருக்கிறது. அவர்களுடைய நிலைமை எனக்கு கொஞ்சம் நன்றாகத் தெரியும். அவர்களுடைய நிலைமை கண்டிப்பாக உயர்த்தப்படவேண்டும் என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். அதற்காக ஒரு விசாரணைக் கமிட்டியை இப்போது போடவேண்டியது அவசியமா என்பதுதான் பிரச்னை. இதற்குத் தேவையில்லை. இதை ஒரு பெரிய பிரச்னையாக்காமல், நம்முடைய சர்க்கார் ஊழியர்களிடையே பரவலான அதிருப்தியை உண்டாக்காத நிலைமையில் நாம் பொறுப்புடன் நடந்து கொள்ளவேண்டும் என்பதை வற்புறுத்தி முடித்துக்கொள்கிறேன்.

**SRI T. KARIA GOUNDER :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் தீர்மானத்தை ஒட்டி என்ன பேசுவது, இந்தத் தீர்மானம் இந்தச் சபையில் எதற்காகக் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதை யோசிக்கும்போது எனக்கே ஒரு வியப்பாக இருக்கிறது. ஏனென்றால் ஆளும் கட்சியில் இருக்கிற சர்க்கார் இந்த நாட்டில் இருக்கும் பல்லாயிரக்கணக்கான என். ஜி. ஒக்களுடைய நிலைமையை கவனிக்காது, புறக்கணித்துக் கொண்டிருப்பது போலவும், அவர்கள் எந்த விதமான வசதிகளும் செய்து கொடுக்க முன் வராது இவர்கள்தான் அவர்கள் விஷயத்தில் அக்கறை கொண்டிருப்பது போலவும் இந்தத் தீர்மானத்தை வலியுறுத்த முன் வந்திருப்பதை நான் எதிர்க்கிறேன். இது எந்த வகையிலும் அவர்களுக்கு நன்மையைச் செய்யாது. அவர்களிடத்தில் மேலும் அதிருப்தியை உண்டாக்குவதற்காகத்தான் இந்தத் தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்பதை உணர்கிறேன். காரணம் என்னவென்றால் இன்றையதினம் காலையில் 40–வது பிரிவின் கீழ் கனம் அண்ணாமலை அவர்கள் வட ஆற்காடு ஜில்லாவில் மழை பெய்ய வில்லை, அங்கே வசிக்கின்ற லட்சக்கணக்கான மக்களும், ஆடுமாடுகளும் தீவனத்திற்கு வழியில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அதற்கு என்ன செய்யப்போகிறார்கள் சர்க்கார்—என்பதாக பலபல அவசரமான விஷயங்களையும், கவலை தரும் விஷயங்களையும் குறிப்பிட்டால் முன்னேக்கி இருக்கும் நேரத்தில் ஏதோ கூடவோ குறைவோ—மாதாமாதம் முதல் தேதி பிறந்தால் சம்பளம் என்று இருக்கும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுடைய நிலைமையை மிகப் பெரிதாக எடுத்துக்காட்டுவதிலிருந்து இதுதான் தெரிகிறது. அவர்களுடைய நிலைமையை உயர்த்தவேண்டும் என்பது உண்மையாக இருக்கலாம். விவசாய மக்களுடைய பிரச்னை பெரிய அளவில் இருக்கும்போது, தொழிலாளி மக்களுடைய பிரச்னை பெரிய அளவில்
4-10 p.m. இருக்கும்போது இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்து சர்க்காரைக் கட்டுப்படுத்தி, உடனடியாக இதை அமுலாக்குமாறு வற்புறுத்துவதில் என்ன அவசரம் இருக்கிறது என்று புரியவில்லை. நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவுத் திட்டத்தின்போது இதைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவர்களுடைய பிரச்னையை சர்க்கார் கவனித்து வருவதாக உறுதி அளித்திருக்கிறார்கள். நிதி நிலைமை என்ன என்று தெரிந்திருந்தும் இப்போது அவர்களுடைய சம்பளத்தை உயர்த்தவேண்டும் என்று நாம் வற்புறுத்தினால் சர்க்கார் என்ன செய்வார்கள்? புதிதாக வரி மூலமாகத்தான் பணம் திரட்டி அவர்களுக்குக் கொடுக்கவேண்டும். புதிதாக வரி போடுவது என்றாலும் நாங்கள் ஆதரிக்கத் தயார் என்று எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் சொன்னால் நான் நிதி அமைச்சரிடத்தில் "வரி ஏதாவது போட்டாவது இவர்கள் சம்பளத்தை உயர்த்துங்கள்" என்று கேட்டுக்கொள்

ளத் தயாராக இருக்கிறேன். இந்த தேசம் விடுதலை அடைந்த பிறகு, மக்களின் வாழ்க்கைத்தரம் எந்த நிலையில் இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரியும். மத்திய சர்க்கார் அவர்களுடைய உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தை உயர்த்துவதற்காக சம்பளக் கமிஷனை நியமித்ததுபோல், இந்த மாநில சர்க்காரும் இந்த ராஜ்ய சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தை உயர்த்துவதற்கான யோசனைகளைக் கூறக்கூடிய ஒரு சம்பளக் கமிஷனை அமைக்க வேண்டும் என்று அடிக்கடி வற்புத்தப்படுகிறது. என். ஜி. ஓ. சங்கத்தார் சென்னைக் கடற்கரையிலும்கூட கூட்டம் கூட்டினார்கள். அவர்கள் சர்க்காரை பயமுறுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன் தீர்மானங்கள் போடுவதும் சர்க்காருக்குத் தெரியும். சர்க்கார் வேறு, சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் வேறு, பொதுமக்கள் வேறு என்ற அபிப்பிராயத்தை எல்லோரும் விட்டுவிட வேண்டும். சட்டப்படி எங்களுடைய பதவியும் நாட்டை ஆள்பவர்கள் பதவியும் ஐந்து வருடங்களுக்குப் பிறகு முடிந்துவிடும். பதவிக்காலம் ஐந்து வருடங்கள்தான். ஆனால், சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பதவிக்காலம் அப்படிப்பட்டது அல்ல. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்தான்—நிர்வாக இயந்திரம்தான் சர்க்காரின் அஸ்திவாரம், சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு அளிப்பதற்கு, சர்க்காருக்கு போதிய பணம் வேண்டும். அதற்கு சர்க்காருக்கு பணம் கிடைக்கச் செய்வதற்காக, எந்த வரிகளைப் போடலாம் என்று எதிர்க் கட்சிகளின் தலைவர்கள் யோசனைகள் சொன்னால், அந்த வரிகளைப் போட்டு அவைகள் மூலம் கிடைக்கும் பணத்தை உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வாகக் கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறோம் என்று வலியுறுத்திச் சொல்லிக்கொள்கிறேன். கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு அளிக்கக்கூடிய அளவிற்கு வருவாய் பெறுவதற்கு சர்க்கார் என்ன வழிவகைகளைக் கையாளவேண்டும் என்று அவர்கள் யோசனை சொல்ல வேண்டும். (குறுக்கீடு.) "வரி போடலாமா என்றால், அதை ஆமோதிப்பதற்கு இரண்டு கைகளையும் தூக்குகிறேன்." என்று கனம் எதிர்க் கட்சித் தலைவர் சொல்லுகிறார். நாங்கள் எல்லோரும் உத்தியோகஸ்தர்களுக்கு விரோதிகள், ஆட்சியாளர்களுக்குத்தான் ஆதரவாளர்கள் என்ற எண்ணத்தை விட்டுவிட வேண்டுமென்று உத்தியோகஸ்தர்களை இந்த சபையின் மூலம் கேட்டுக்கொள்கிறேன். இந்தத் தீர்மானத்தை இங்கே கொண்டுவந்திருக்கும் கனம் நண்பர், சர்க்கார் என்ன செய்தால் உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு அளிக்க முடியும் என்ற யோசனையையும் சொல்லியிருக்க வேண்டும். இந்த ஆண்டு 63 கோடி ரூபாய் செலவு செய்ய நமது அரசாங்கத்தார் திட்டமிட்டிருக்கிறார்கள். உத்தியோகஸ்தர்களுக்கு சம்பள உயர்வு கொடுக்கவேண்டுமானால், சர்க்கார் இன்னும் 10 கோடி ரூபாய் செலவு செய்ய வேண்டியிருக்கும். அந்தப் பத்து கோடி ரூபாய்க்கு எங்கே போவது? அந்தப் பத்து கோடி ரூபாய் சம்பாதிப்பதற்காக சர்க்கார் என்ன வரி போடலாம் என்று கனம் நண்பர் தமது தீர்மானத்தில் யோசனை சொல்லியிருந்தால், நாங்கள் அவரைப் பெரிதும் போற்றுவதற்குக் கடமைப்பட்டவர்களாக இருப்போம். வேலை நிறுத்தம் செய்ய வேண்டுமென்ற யோசனையை அரசாங்க உத்தியோகஸ்தர்கள் கைவிட்டு ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. வேலை நிறுத்தம் செய்து அரசாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்யப் போவதாக கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்கள் சொன்னபோது, அவர்களுக்கு சலுகை அளிப்பதற்கான திட்டம் அரசாங்கத்திடம் இருக்கிறது என்று கனம் நிதி அமைச்சரும் கனம் முதல் அமைச்சரும் சொன்னார்கள்; அவர்கள் அவ்வாறு சொன்னதன் பேரில்தான் உத்தியோகஸ்தர்கள் வேலை நிறுத்த யோசனையைக் கைவிட்டார்கள் என்ற செய்தியை நாம் எல்லோரும் பத்திரிகைகளில் படித்தோம். நிதி அமைச்சரிடம் உத்தியோகஸ்தர்களின் நிலைமையை எடுத்துச்சொல்லி, அவரை, அடுத்த வரவு செலவு திட்டத்தில் உத்தியோகஸ்தர்களுக்கு சலுகை கொடுக்கச் செய்யத் தயாராயிருக்கிறோம் என்பதையும், இந்தத் தீர்மானத்திற்கு அவசியமில்லை என்பதையும் கனம் சபாநாயகர் மூலம் இந்த சபையினருக்குத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

SRI C. N. ANNADURAI : மதிப்பிற்குறிய தலைவர் அவர்களே, சர்க்கார் உத்தியோகத்திலிருக்கும் அவலநிலையிலுள்ள கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்களுடைய பிரச்னையை கவனிப்பதாக, ஆளும் கட்சியினர் இந்த சட்டமன்றத்தில் சொல்லியதுடன் மட்டுமின்றி வெளியிலும் பல்லாண்டு காலமாக பன்முறை சொல்லியிருந்தாலும்கூட, இன்று வரையில் அப்பிரச்னையைத் தீர்க்க முடியாமல் அவர்கள் ஓரளவு திண்டாடிக் கொண்டிருக்கிறார்களே என்ற ஐயப்பாட்டால்தான், அதைத் தீர்ப்பதற்கான சில யோசனைகளை எதிர்த் தரப்பில் உள்ளவர்கள் சொல்லுவதற்கு வகைசெய்வதற்காகவும், இந்தப் பிரச்னையை அலசி ஆராய்ந்து பிரச்னையைத் தீர்ப்பதற்கு ஒரு நல்ல ஆறுதலான திட்டத்தை உருவாக்குவதற்காகவும் ஒரு கமிட்டியை அமைக்கலாம் என்று, இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்திருக்கும் கனம் நண்பர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் விரும்புகிறார். வேலை நிறுத்தம் செய்யப்போவதாக முன்பு சொல்லிக்கொண்டிருந்த சர்க்கார் ஊழியர்களுக்கு, சலுகைகள் தருவதாக கனம் நிதி அமைச்சர் வாக்களித்து, அவர்களை, வேலை நிறுத்த யோசனையைக் கைவிடச் செய்தார் என்பதை எனக்கு முன் பேசிய ஸ்ரீ கரிய கௌண்டர் அவர்களுடைய பேச்சிலிருந்து நான் தெரிந்து கொள்ளுகிறேன். அவர், அத்துடன் மட்டுமின்றி, அதற்காக சர்க்கார் வரி போட்டால் அதை நாங்களெல்லாம் ஏற்றுக் கொள்கிறோம் என்றும் சொன்னார். மேலும், ஸ்ரீ கரிய கௌண்டர், தமக்கு கனம் நிதி அமைச்சரிடம் உள்ள அபாரச் செல்வாக்கைப் பயன்படுத்தி, வரிகள் போட்டு கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்களின் சம்பள உயர்விற்குத் தேவையான பணத்தை பெறச் செய்வதற்கு தாம் அவரை இணங்கவைக்க முடியும் என்றும் கூறினார்.

அவர்கள் அப்படியெல்லம் எடுத்துச் சொன்னதிலிருந்து கெஜட் பதிவில்லாத சர்க்கார் ஊழியர்களுக்கு அதிகமான சம்பளம் தரவேண்டுமென்பதை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். கொள்கையளவில் என்றாலும் கொள்கை அளவில் ஏற்றுக்கொண்டிருக்கிற அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு அவர்களுக்கு வழிவகை இல்லாத காரணத்தினால் தள்ளிக் கொண்டு போகிறார்கள் என்பது ஒருபுறத்தில் இருந்து பார்த்தால் நன்கு தெரிகிறது. வேறு சில அங்கத்தினர்கள், எதிர் தரப்பில் உள்ளவர்கள் இந்த யோசனையை சொல்கிறார்கள் என்ற காரணத்தினால், இவர்களைவிட சமுதாயத்தில் பின்தங்கிக் கிடக்கும் விவசாய பெருங்குடி மக்களிடமிருந்து துவங்கி கோவில் கோபுர வாசலில் இருக்கும் பிச்சைக்காரர்களின் நிலை வரை நண்பர் நமக்கு கவனப்படுத்தினார். அப்படியுள்ளவர்கள் இருக்கும் போது இவர்களைப் பற்றி கவனிப்பானேன் என்று மற்றொரு கனம் அங்கத்தினர் எடுத்துச் சொன்னார். . இதில் இருந்து நான் ஒன்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். ஆளும் கட்சி இதற்கு ஏதாவது திட்டவட்டமானதொரு கொள்கையை வைத்திருக்கிறதா? சர்க்கார் ஊழியர்களின் கோரிக்கைகள் நியாயமானதென்று சர்க்கார் கருதுகிறார்களா ? அப்படி நியாயம் என்று கருதி அதை நிறைவேற்றுவதற்கு இப்பொழுது காலமில்லை என்று வாதாடுகிறார்களா, அல்லது காலம் சரியாகயில்லை என்று சொல்கிற நேரத்தில் ஒரு கனம் அங்கத்தினர் சொன்னபடி திட்டங்கள் எல்லாம் நிறைவேற்றி நாட்டின் செல்வ நிலை சீர்பட்ட பிறகு இதைக் கவனிக்கலாம் என்று இந்தப் பிரச்னையை ஒத்தி போட்டு வைக்கிறார்களா அல்லது வேறு சில அங்கத்தினர்கள் சொன்னதுபோல சமுதாயத்தில் உள்ள மற்றவர்களை நன்கு கை தூக்கி விட்ட பிறகு இந்தப் பிரச்னையைக் கவனிக்கலாம் என்று இப்பிரச்னையை ஊறுகாய் பானையில் போட விரும்புகிறார்களா என்ற விஷயத்தில், தெளிவற்ற குழப்பமோ என்று ஐயப்படத் தக்க விதத்தில் ஆளும் கட்சியின் போக்கு இருந்து வருகிறது. ஆளும் கட்சியின் போக்கு இப்படி இருந்து வருவது, என்.ஜி.ஓ.க்களின் மனதில் ஏற்பட்டிருக்கிற குமுறல்கள் என்னென்ன வழிகளில் நாட்டில் வெளிப்படுகிறது என்பதை அவர்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள். அதைத்தான் கரிய கௌண்டர் அவர்கள் சென்னை கடற்கரையில்கூட கூட்டம் போடுகிறார்களே என்று மெத்த வருத்தத்துடன் சொன்னார்கள். கடற்கரை

மாலை வேளையில் ஓய்வு பெறக்கூடிய இடந்தான். அப்படி ஓய்வு எடுக்கப் போகிறவர்கள் ஒரு சிலர் இருப்பதோடு தங்கள் உள்ளக் குமுறல்களை வெளிப்படுத்த பலர் கடற்கரைக்கு போகிறார்கள் என்ற நிலையை இந்நாட்டில் உங்கள் ஆட்சி ஏற்படுத்தி விட்டது. உல்லாசத்திற்கு பயன்படுத்தப் படக்கூடிய கடற்கரை உள்ளக் குமுறல்களை எடுத்துக் காட்டும் இடமாகி விட்டது, உங்கள் ஆட்சியில். மாற்றுக் கட்சியினர் என்.ஜி.ஓக்களை தூண்டி விடுகிறார்கள் என்ற குற்றச் சாட்டை சொல்லி விட்டு என்.ஜி.ஓக்கள் தங்கள் குறைபாடுகளை தாங்களே எடுத்துச் சொல்லலாமே என்று நிதியமைச்சர் அவர்கள் முன்பு ஒரு தடவை இங்கு எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அது மட்டுமல்ல. அவர்கள் விஷயத்தில் எதிர்க்கட்சிக்காரர்களுக்குள்ள அக்கறையைவிட எங்களுக்கு அதிகம் இருக்கிறது என்பதை நாங்கள் கூட்டிக் கொடுத்திருக்கும் 12 ரூபாய் உயர்வு எடுத்துக் காட்டவில்லையா என்று புள்ளிவிவரங்களோடு தனது மனதில் உள்ள நல்லெண்ணத்தையும் இணைத்து கூறினார். அப்படி 12 ரூபாய் அதிகமாகக் கொடுத்த நிலையில் இயற்கையாகவே வாழ்க்கைச் செலவு புள்ளிகள் அதிகப்பட்டு போனதால் எட்டளவில்தான் இந்த 12 ரூபாய் பயன் பட்டதே தவிர, வாழ்க்கைச் செலவு அதிகமாகி விட்டதால் என்.ஜி.ஓ.க்கள் அதனால் நல்லமுறையில் பயன் அடையவில்லை. ஆகவே, மறுபடியும் அந்தப் பிரச்னையைப் பற்றி நாம் பேசுகிறபோது ஒருவருக்கொருவர் மனம் விட்டு, ஆளும் கட்சியினரும் எதிர்க்கட்சியினரும், இந்தப் பிரச்னையைப் பற்றி பேசவேண்டும். அப்படி மனம் விட்டு பேசிக் கொள்ள இந்த மன்றத்தை விட இதற்கென்று ஒரு ஆய்வுக் குழு அமைத்து எதிர்கட்சியில் உள்ளவர்களும், ஆளும் கட்சியில் உள்ளவர்களும், தேவைப் பட்டால் பொருளாதாரத் துறையில் புது யோசனைகள் சொல்ல என்.ஜி.ஓ. பிரதிநிதி ஒருவரையும் அழைத்து இந்தப் பிரச்னைக்கு நல்லதொரு முடிவு காணவேண்டும், அதை உடனடியாக தீர்க்க வேண்டுமென்பதுதான் எங்கள் விருப்பமே தவிர ஒரு அங்கத்தினர் குறிப்பிட்டது போல் சர்க்காரை சங்கடத்தில் ஆழ்த்திவிட வேண்டுமென்பதல்ல எங்கள் நோக்கம். அப்படி சர்க்காரை சங்கடத்தில் ஆழ்த்திவிட வேண்டுமென்று கருதினாலும் அதிலிருந்து தப்பித்துக்கொள்ள உங்களுக்கு எண்ணிக்கை பலம் இருக்கிறது என்பதை எல்லோரும் அறிவார்கள். பலரதுவாதத்தின் பலமும் எண்ணிக்கை பலத்தில்தான் இருக்கிறது என்பதை நாங்கள் உணராமலில்லை. இந்தப் பிரச்னை மூலம் சர்க்காருக்கு சங்கடத்தை விளைவிக்க வேண்டுமென்று நாங்கள் யாரும் விரும்பவில்லை. சர்க்கார் ஊழியர்கள் அதிருப்திப்பட்ட மனதோடு இருந்தால் சர்க்கார் நிர்வாகம் திறம்பட நடக்காது என்பதை நாம் உணர வேண்டும். ஒரு கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார், சர்க்கார் ஊழியர்கள் பத்து, இருபது வருடகாலம் வரை தியாக உணர்ச்சியோடு பொறுத்திருக்க வேண்டுமென்று. அப்படி பத்து இருபது ஆண்டு காலம் வரை தியாக உணர்ச்சியோடு பொறுத்திருக்க வேண்டுமென்று எதிர்ப்பார்ப்பதில் தவறு இல்லை. ஆனால் அப்படி பத்து இருபது ஆண்டு காலம் இருந்தால் உண்மையாகவே அவர்கள் வாழ்க்கையில் பெரும் சிக்கல்கள் ஏற்படுவது மட்டுமல்லாமல் அவர்களால் சமுதாயத்திற்கு அளிக்கப்படுகிற நமது எதிர்கால சந்ததிகள் மிகுந்த புத்தி சூன்ய மனதோடுதான் பிறக்க நேரிடும். ஆகையால்தான் இந்தப் பிரச்னையை உடனடியாகத் தீர்க்க வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். பல பிரச்னைகளைத் தீர்ப்பதிலே இந்த சென்னை ராஜ்யம் முன்னணியில் நிற்கின்றது என்று அடிக்கடி அறிவுறுத்தி வருகின்ற நிதி அமைச்சர் அவர்கள் இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதிலே என்ன சிக்கல் இருக்கிறது என்று தெரிவிக்க வேண்டும். சிக்கல் எங்கே இருக்கிறது என்று அவர் எடுத்துக்காட்டுவார்களேயானால், அதைக் குறித்து ஆலோசித்துப் பார்ப்பதிலே எதிர் கட்சிகள் எல்லாம் உண்மையிலேயே அவர்களிடத்திலே நல்லெண்ணம் வைத்திருக்கின்ற காரணத்தினால், ஒத்துழைக்கத் தயாராயிருக்கின்றன. சம்பளம் அதிகம் தரப்படவேண்டியது 4-20 p.m. நியாயம் என்று அவர்கள் நியாயத்தை ஏற்றுக்கொள்கிறார்களோ

என்பது தெரிய வேண்டும். மத்திய சர்க்காருக்கும், மாநில சர்க்காருக்கும் இடையே பேதம் இருப்பதை நீக்கியாக வேண்டுமென்ற கொள்கை சர்க்காரிடம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன். சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பொறுத்த வரையில், மாநில சர்க்காருக்கேற்ற விதி முறைகளை சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு வெள்ளையர் ஆட்சி காலம் முதல் இருந்து கொண்டிருக்கிற விதிகளை—மாற்றியமைக்க வேண்டுமென்று இந்த சர்க்காருக்கு மனம் இருக்கிறதா ?—அதை ஏற்றுக்கொள்வார்களா, கொள்கையளவில் என்று அறிய விரும்புகிறேன். நான் குறிப்பிடுவது, இந்திய அரசியல் சட்டத்தில் இருக்கிற 309-வது பிரிவுப்படி ராஜ்ய சர்க்காரிடத்தில் வேலை செய்கிற ஊழியர்களுடைய நடைமுறை வேலைகளை கவனிப்பதற்கேற்ற புதிய வழி வகைகளை சர்க்கார் கையாளப் போகிறார்களா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இதிலே ஒரு தெளிவு ஏற்பட்டு விட்டால், அதற்குப் பிறகு பணத்தைக் கண்டுபிடிப்பது என்பது கஷ்டமான காரியமல்ல. நிதி அமைச்சருடைய வேலையே பணம் இருக்கிற இடத்தைப் பார்த்து எடுத்து, பணம் தேவைப்படுகிற இடத்தில் பகிர்ந்து கொடுப்பதாகும். " பணம் எங்கே இருக்கிறது, பணம் எங்கே இருக்கிறது" என்று எங்களைப் போலவே அவரும் கேட்டுக் கொண்டிருப்பது நிதி அமைச்சருடைய வேலை இல்லை என்பதை நம் நிதி அமைச்சர் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். ஒரு சினிமா பாடலிலே வருகின்றார் போன்று " எங்கே தேடுவேன், பணத்தை எங்கே தேடுவேன்" என்று சொல்லிக்கொண்டு—நாமெல்லாம் இங்கே ரூ. 150 பெற்றுக் கொண்டும், அமைச்சர் அவர்கள் ஆயிரக் கணக்கில் பெற்றுக்கொண்டும்—எங்கே பணம் இருக்கிறது என்று, தேடிக் கொண்டிருக்கிறோம் என்று சொன்னால், அதை வெளியுலகத்திலுள்ளவர்கள் பார்ப்பார்களேயானால், நம்முடைய திறமையைப் பற்றி ஐயுறுவார்கள். ஆகையால்— இந்தப் பிரச்னை ஒரு கட்சிக்கு மட்டும் சொந்தமானதாகாது—இந்த மன்றத்தில் வீற்றிருக்கிற நமக்கு இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கேற்ற திறமை இருக்கிறதா?—அல்லது இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியாத அளவுக்குத் திறமை குறைவு இருக்கிறதா? என்பதை உலகத்திற்குக் காட்டியாக வேண்டும். ஆகையால்தான் கொள்கையளவிலே சர்க்கார் திட்ட வட்டமாக என்ன கருதுகிறார்கள் என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன். ஒவ்வொரு தடவையும் இந்தப் பிரச்னை உருவெடுக்கிற நேரத்திலே " எங்களுக்கு இதை கவனிக்க தெரியும், நீங்கள் இதிலே தலையிடவேண்டாம் " என்று ஒரு இடத்திலே சொல்வதும், மற்றொரு இடத்திலே " எதிர் கட்சிக்காரரை நாடினால் உங்களுக்குக் கிடைப்பதுகூட கிடைக்காமல் போய் விடும்" என்று அவர்களை மிரட்டுவதும், இன்னொரு தடவை விவாதத்தின்போது " இந்தப் பிரச்னைதான் முக்கியமான பிரச்னையா இதைவிட அடிப்படைப் பிரச்னைகள் ஏராளம்" இருக்கின்றனவே, அவைகளை கவனித்து விட்டு இவைகளுக்கு வருவோம் என்று இப்படியே நழுவிக் கொண்டிருப்பதில்தான் அவர்கள் திறமை காட்டுகிறார்களேதவிர, அவர்களுடைய கொள்கை என்ன என்பதனை திட்டவட்டமாக தெளிவுபடுத்தவில்லை. ஆகையால் நான் முதலில் அறிந்துகொள் ள விரும்புவது, இந்த சர்க்காருக்கு இந்த விஷயத்தில் என்ன வகையான கொள்கை இருக்கிறது என்பதாகும். இதைத் திட்டவட்டமாக எங்களுக்கு எடுத்துச் சொல்வதற்கு முன் வரவேண்டும்.

பொதுவாக சர்க்கார் தரப்பிலிருந்தும், ஆளும் கட்சியிலிருந்தும், இது வரையில் பேசியவர்கள் இப்போதும், இதற்கு முன்னாலே இந்த மன்றத்திலே எடுத்துப் பேசப்பட்ட காலத்திலேயும், அவர்கள் தந்திருக்கின்ற கருத்துக்களை மூன்று வகைகளாகப் பிரித்துப் பார்க்கலாம். ஒன்று, " எங்கள் இடத்திலே போதுமான பணம் இல்லை " என்பது அவர்கள் சொல்லுகிற வாதமாகும். அதனை ஒரு வாதம் என்று ஏற்றுக்கொள்ள மாட்டேன் • என்று நான் முதலிலேயே சொன்னேன்—பணம் இருக்கிற இடத்தைக் கண்டுபிடித்து எடுப்பதுதான் ஒரு நிதி அமைச்சருடைய வேலை. " வரி போட்டுப் பணம் வாங்கினால் நீங்கள் சும்மா இருப்பீர்களா ? " என்று கனம் அங்கத்தினர் கரிய கௌண்டர் அவர்கள்

30th September 1958] [Sri C. N. Annadurai]

கேட்டார்கள்—நிச்சயமாக சும்மா இருப்போம். ஆனால், எந்த இடத்திலே வரி போட வேண்டும் என்பதிலே—எவ்வளவு வரி போடவேண்டும் என்பதிலே—யாருக்குப் போடவேண்டும் என்பதிலே, நமக்குள்ளே அபிப்பிராய பேதம் நிச்சயமாக வரும் என்று இந்த மன்றத்திலே நான் பல தடவைகள் குறிப்பிட்டிருக்கிறேன். உதாரணமாக, "இந்த மாநிலத்திலுள்ள ஜமீந்தார்களிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட நிலவுடமைகளுக்கு நஷ்ட ஈடாகக் கொடுக்கிற பணத்தைக் கொஞ்ச காலத்திற்குக் கொடுக்காமல் நிறுத்தி வைத்து, அந்தப் பணத்தை இதற்குப் பயன்படுத்தலாமா? " என்று கேட்டால், அதற்கு நான் என்னுடைய இரண்டு கைகளையும் தூக்கத் தயாராக இருக்கிறேன். அதே நேரத்தில் " பண்டங்களை வாங்குகின்ற ஏழை மக்களுக்கு விதிக்கப்படுகிற விற்பனை வரியில் இன்னொரு பைசா கூட்டலாமா ? " என்று கேட்டால் " கூடாது, கூடாது " என்று தான் சொல்வேன். ஆகையால் " வரி போட்டால் ஒத்துக்கொள்வீர்களா" என்று பொதுப்படையாகக் கேட்டால் பலன் இல்லை. சாதாரணமாக பணம் இல்லை என்று சொல்லப்படுகிற நேரத்தில அதை ஒரு வாதம் என்றும் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

முன்பு ஒரு தடவை இதைப் பற்றிப் பேசுகிற நேரத்தில் கனம் நிதி அமைச்சர் அவர்கள், " நிதி அறிக்கை இருக்கிறது, எதிலே செலவழிக்கிற பணத்தைக் குறைத்து இதற்குச் செலவிடுவது என்று பார்த்து விட்டு வழி காட்டுங்கள்—கல்விக்குக் கொடுக்கின்ற மானியத்தைக் குறைத்துக் கொடுக்கட்டுமா ? தொழில் துறைக்குக் கொடுக்கின்ற மானியத்தைக் குறைத்துக் கொடுக்கட்டுமா ? இதைக் குறைக்கட்டுமா ? அதைக் குறைக்கட்டுமா ?" என்று கேட்டார்கள். உண்மையாகவே ஒரு செலவைக் குறைத்து இதற்குத் தந்தால்கூட சரிக்கட்ட முடியாத அளவுக்கு நிலைமை இருக்கிறது என்பதை சாதாரணமாக அனைவரும் அறியலாம். ஆகையால் தான் பணம் இல்லை என்று சொல்லுகிற நேரத்தில், வரிகள் மூலமாகத் தான் பணத்தைத் தேட வேண்டும் என்பதை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று நான் பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன். பல தடவைகள் இந்த மன்றத்திலே பேசியும் இருக்கிறேன். வரி போடுவதன் மூலமாகத் தான் ஒரு சர்க்கார் தன் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்ற தத்துவத்தை மாற்றி, வரியோடு, வருமானத்தைப் பெறத்தக்க தொழில்களை நடத்த சர்க்கார் முன்வர வேண்டும். இதனால் இன்னொரு அடிப்படைக் கொள்கையையும் மாற்றிக் கொள்ள நேரிடும். அந்த அடிப்படைக் கொள்கையை—நீங்கள் தொழில் திட்டத்தில் தனியாருக்குச் சில வற்றை ஒதுக்கியிருக்கிறீர்கள்—பொதுத் துறைக்கென்று சிலவற்றை ஒதுக்கியிருக்கிறீர்கள்—இதில் மாற்றமே கிடையாது என்று சொல்லுகிற அடிப்படைக் கொள்கையை சற்று மாற்றி, தனியார் துறைக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கிற—அதிக லாபம் தரக்கூடிய தொழில்—பயிற்சி ஏற்பட்டிருக்கிற தொழில்—இவைகளை தாங்களே ஏற்று நடத்த வேண்டும் என்று என்றைய தினம் இந்த சர்க்கார் கொண்டுவருகிறார்களோ, அப்போது தான் வருமானம் அதிகரிக்கும்—வருமானம் அதிகரித்தால் தான் இவர்களுக்கெல்லாம் பணத்தைத் தர முடியும். கனம் அங்கத்தினர் கரிய கௌண்டர் அவர்கள் வாதத்திற்காக வேண்டுமானால் சொன்னார்கள் " வரி போட ஒத்துக்கொண்டால் நிதி அமைச்சர் அவர்களிடம் சொல்லுகிறேன் " என்று—அவர் சொன்னதினால் நிதி அமைச்சர் ஏற்றுக்கொண்டார்கள் என்று பொருள் இல்லை—நாங்கள் வரி போட ஒத்துக்கொள்வோம்—இந்த நாட்டில் 3 கோடி தமிழர்கள் இருக்கிறார்கள் என்றால், இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக தலைக்கு ஒரு ரூபாய் வரி போட வேண்டும் என்று சொன்னால்—நாங்கள் ஒத்துக் கொள்கிறோம் என்று சொன்னால் கூட, நீங்கள் போட மாட்டீர்கள். ஏன் நீங்கள் போட மாட்டீர்கள் என்று சொல்லுவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. சும்மா, " போடுகிறோம் "என்று வாதத்திற்காகச் சொல்லி விடலாம். இது சுவையளிக்கக் கூடியதாக இருக்கிறதே தவிர பிரச்னையைத் தீர்ப்பதாகாது. ஆகவே, சொல்லப்படுகிற முக்கியமான வாதம் பணம் இல்லை என்பது ஒரு வாதமாகாது. மற்றொரு

வாதம், என்.ஜி.ஓக்கள் பரவாயில்லை—ஒரு கனம் அங்கத்தினர் சொன்னதைப்போல அவர்களை விட கஷ்டப்படக் கூடியவர்கள் அநேகம் பேர்கள் இருக்கிறார்கள் என்பது. முதல் தேதி எப்போது வரும் என்று பார்த்துக் கொண்டிருப்பார்கள்—முதல் தேதி சம்பளம் வாங்கி விடுகிறார்கள்—28-ம் தேதி முதல் கடன்காரர்கள் பிடுங்குகிற பிடுங்கல் கனம் அங்கத்தினருக்குத் தெரியாது. 28-ம் தேதி முதல் கடன்காரர்கள் தொல்லை படுத்த ஆரம்பித்து, " 1-ம் தேதி வரட்டும், 1-ம் தேதி வரட்டும் " என்று சொல்வதை அடிப்படையாக வைத்து ஒரு சினிமா படத்தையே தயாரித்திருக்கிறார்கள். சினிமாவையே விரும்பாத கட்சியிலே இருக்கின்ற காரணத்தினால், கனம் அங்கத்தினர் பார்த்திருக்க மாட்டார்கள்—நான் பார்த்திருக்கிற காரணத்தினால் இதைப் பற்றிச் சொல்கிறேன்—அந்தப் படம் " முதல் தேதி " என்பது. முதல் தேதி ஆனவுடன், ஜமீன்தார்களுக்கு நஷ்ட ஈடாகக் கிடைக்கக்கூடிய தொகையைப் போல பெரும் தொகையை என்.ஜி.ஓக்கள் வாங்கிக்கொண்டு வருவது போலவும், அதைப் பங்கிட்டுப் பங்கிட்டுக் கை ஓய்ந்து போய், " கொஞ்ச நாளைக்கு ஓய்வு இருங்கள் " என்று இவர்கள் அறிவுரை எடுத்துச் சொல்வது " எவ்வளவு கடின இருதயம் இருந்தால் அப்படிப்பட்ட வாதம் வரும் ? " என்று என்னை நானே கேட்டுக்கொள்கிறேன்.

மூன்றாவதாக, " நாங்கள் திட்டம் போட்டிருக்கிறோம், திட்டம் பெரிதா? இது பெரிதா ? " என்று நிதி அமைச்சர் அவர்கள் கேட்டிருக்கிறார்கள். இந்தத் திட்டம் என்ற பிரச்னை இந்த மாநிலத்தில் மட்டுமல்ல. எப்போது பேசினாலும்—எந்தப் பிரச்னையைப் பற்றிப் பேசினாலும்—திட்டத்தையும் அதையும் இணைத்து இணைத்துப் பேசுகிறார்கள். அப்படிப் பேசுகிற காரணத்தினால் ஒன்றைக் குறிப்பிட்டுச்சொல்வேன்—திட்டம் வெற்றி பெற வேண்டுமானால் அவர்களுக்குத் திருப்தி ஏற்பட்டால்தான் திட்டம் வெற்றி பெறும். திட்டம் வெற்றி பெறட்டும், இதை கவனிக்கலாம் என்று சொல்வது சரியான முறை ஆகாது ; திட்டம் தோற்றுப் போக இதுதான் முக்கியமான காரணமாக இருக்கும் என்று மிகவும் பணிவன்போடு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே, என்னுடைய இரண்டாவது பதில்—" உங்கள் திட்டத்திலேயே எங்களுக்குச் சந்தேகம் இருக்கிறது ". ஏதோ, திட்டம் என்றால் நாடு பூராவிலும் சரிவர நிறைவேற்றியிருக்கிறோம்—எல்லோரும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்ற மனப்பான்மையில் பேசுகிறீர்கள். ஆனால், திட்டம் நிறைவேற்றப்படுகிற வகையிலும், திட்டம் தீட்டப்படுகிற முறையிலும், திட்டத்திற்காக நீங்கள் செலவழிக்கிற பெரும் தொகையை, சில வேலைகளில் கண்மூடித்தனமாகச் செலவழிக்கிறீர்கள் என்று ஐயப்படுகிற கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் நாங்கள். ஆகையால், " திட்டம் நிறைவேறட்டும், பிறகு பார்க்கலாம் " என்று சொல்வது திருப்திகரமான பதில் ஆகாது. திட்டம் ஒரு சமயத்தில் நல்லபடி நிறைவேற்றப்படவேண்டும் என்று சொன்னாலும் கூட, இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கேற்ற மனப் பக்குவத்தை சர்க்கார் ஊழியர்கள் பெறவேண்டுமானால், அவர்களுடைய சம்பளத்தை அதிகப்படுத்தித்தான் ஆகவேண்டும்.

என்னுடைய நண்பர்கள் எனக்கு சொன்னார்கள்—கணக்குத் தவறாக இருந்தால் நிதி அமைச்சர் அவர்கள் திருத்துவார்கள் என்று நினைக்கிறேன்—மத்திய சர்க்கார் ஊழியர்களாக இருப்பவர்களுக்கு சட்ட பூர்வமான எல்லாவகையான வருமானமும் சேர்ந்து மாதத்திற்கு 130 ரூபாய் கிடைக்கிறது என்றும், மாநில சர்க்காரில் அதே விதமான பணியாற்றுபவர்களுக்கு ரூபாய் 94 கிடைக்கிறது என்றும், பஞ்சப்படியிலே இருக்கிற வித்தியாசத்தையாவது போக்க வேண்டுமென்று என்.ஜி.ஓக்கள் விரும்புகிறார்கள் என்றும் சொன்னார்கள். 130-க்கும் 94-க்கும் இடையிலே இருக்கும் இந்தச் சிறு வித்தியாசத்தை போக்க குறைந்தது 3 கோடி ரூபாய் தேவை என்று புள்ளிவிவரத்திலே காட்டியிருக்கிறார்கள். "மூன்று கோடி ரூபாயை எப்படிப் பெறுவது ?—சம்பளத்தை அதிகப்படுத்தினால்

30th September 1958] [Sri C. N. Annadurai]

இன்னும் சில கோடி ரூபாய்கள் தேவைப்படும்; அதற்கு எங்கே பணம் இருக்கிறது?" என்று நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் சில கூட்டங்களிலே சொன்னதாக பத்திரிகையில் பார்த்தேன். "உங்கள் அண்ணுதுரையை திட்டம் கேட்டால், கசாப்பு கடை வைக்க சொல்லுகிறுன். வேறு என்ன திட்டம் கொடுத்தான்?" என்று கூறுகிறுர். இன்று காலையிலே ஒரு சர்க்கார் வெளியீட்டை படித்துக்கொண்டிருந்தேன். மாநிலத்திலே கோழிகளைப் பற்றிய வெளியீடு அது. இந்த மாநிலத்தில் கோழிகளினுல் மட்டும் ஆண்டு ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாய் வருமானமுள்ள முட்டைகள் கிடைப்பதாக கணக்குக் காட்டியிருக்கிறுர்கள். வளர்க்கின்ற கோழிகளில், ஒரு கோழிக்கு இரண்டு கோழி வளர்த்தால், மூன்று கோழி வளர்த்தால்—எங்களையா கோழி வளர்க்கச் சொல்லுகிறீர்கள் என்று கோபங் கொள்ளக் கூடாது—கோழி வளர்ப்பைப்பற்றி அறிக்கை வெளியிட்டதன் காரணமாகச் சொல்லுகிறேன்—20 நாட்களுக்கு முட்டை இடுகின்ற கோழி அதற்கு பதிலாக 40 நாட்களுக்கு மீண்டும் முட்டையிடும். இதனுல் இப்பொழுது கிடைக்கின்றதைவிட 2 கோடி ரூபாய், 3 கோடி ரூபாய் அதிக வருமானம் கிடைக்கும். பணத்திற்கு என்ன செய்வது என்று நீங்கள் எடுத்துச் சொல்வது, உங்கள் விஷயங்களிலே அபாரமான நம்பிக்கை வைத்திருக்கிற எனக்கு ரொம்பவும் சந்தேகத்தைக் கொடுக்கிறது. தொழிலில் வருவாய் கிடைக்கக்கூடிய நல்ல வகையான திட்டங்களை நீங்கள் தீட்டலாம். அதை மேலெழுந்தவாரியாக இந்த மன்றத்திலே பேசுவதைவிட, என்னுடைய நண்பர் கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னதுபோல, இதற்கு ஒரு குழு அமைத்து அதிலே எதிர்க்கட்சிக்காரர்களையும் பொருளாதார நிபுணர்களையும் உட்கார வைத்து நாம் அலசிப் பார்ப்போமேயானுல், ஒரு சமயம் எங்களுடைய மனதிலே தவறு இருக்குமானுல் நீங்கள் நீக்கலாம்; அல்லது, உங்களுடைய சிக்கலை எடுத்துச் சொன்னுல், இது சிக்கல் அல்லவே என்று நாங்கள் எடுத்துச் சொல்லலாம். எங்கள் விஷயத்திலே கொஞ்சம் நம்பிக்கை செலுத்தி, நாங்கள் எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் ஆனுலும், நாங்களும் அந்தப் பிரச்னையில் அக்கரை உள்ளவர்கள் என்பதை உணர்ந்து, வேறு எந்த விஷயத்திலே கவலைப்படாவிட்டாலும், அவர்களை தூண்டிவிடத்தக்கவர்கள் என்ற வகையிலாவது கவனித்து, இந்தப் பிரச்னையை ஆராய வேண்டுமே தவிர, எதிர்க்கட்சிக்காரர்கள் சொன்னுல், நாங்கள் கவனிக்கமாட்டோம் என்று சொல்லுவதில் அர்த்தமில்லை என்பதை பணிவன்புடன் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது எத்தனையோ தொழில் துறைகளிலே நாட்டை ஆளுகின்ற சர்க்கார் தங்களை உட்படுத்திக் கொண்டு, அதன் மூலமாக வருவாய் பெற்று என்.ஜி.ஓக்களின் குறைபாடுகளை தீர்க்க முடியும். தீர்க்க வேண்டும். உடனடியாக சர்க்கார் தங்கள் கொள்கைகளைப்பற்றி திட்டவட்டமாக இன்றையதினம் இந்தமன்றத்திலே தெரிவிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதிலே திட்டவட்டமாக அவர்களுடைய கொள்கைகளை தெரிவிக்க வேண்டுமென்று விரும்புவது என்னவெனில், மாநில சர்க்கார் ஊழியர்கள் கோரிக்கை நியாயமானதா என்பதிலே உங்கள் பதில் தெரியவேண்டும். மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கும், மாநில சர்க்கார் ஊழியர்களுக்கும் இடையே இருக்கிற இந்த சம்பள வித்தியாசம் அநியாயமானது, இதை நீக்குதல் போக்குதல் வேண்டும் என்பதிலே உங்களுக்கு திட்டவட்டமாக முடிவு இருக்கிறதா என்று தெரியவேண்டும். இதற்கு பணம் ஒன்று தான் குறுக்கிடுகிறதா, அல்லது உள்ளத்திலே "இவர்களுக்கு என் தரவேண்டும்" என்று எண்ணுகிறீர்களா என்று தெரியவேண்டும். இதை விட்டு விட்டு தந்தை தன் மகனுக்குச் சொல்லுவது போல, தாய் தன்னுடைய மகளுக்குச் சொல்வது போல, பொதுவாகச் சொல்வது போல நிதி அமைச்சர் "உங்கள் குறை எனக்குத் தெரியாதா?" என்று சொல்லக்கூடாது. அவர்கள் கட்சியில் இருப்பவர்கள் "உங்களுக்கு மட்டும் தாஞ குறை, குறைப்பட்டவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறுர்கள். சொல்லப் போனுல் எங்களுக்கே ஏகப்பட்ட குறை இருக்கிறது" என்று எடுத்துச் சொல்லுவதில் பலன் இல்லை. இந்தப் பிரச்னை நம்மாலே ஆராய்ந்து முடிவு கட்டப்படவேண்டிய பிரச்னை. ஏனென்றுல், சர்க்காருடைய வேலையில்

நாளாக நாளாக நுணுக்கங்களும், திறமையும், அறிவும் தேவைப்படுவது வளர்ந்துகொண்டே போகிறது. " வெல்பேர் ஸ்டேட் " க்ஷேமநல சர்க்கார் என்று திட்டத்திலே எடுத்துக்கொண்டிருப்பதால், அந்த சர்க்கார் வேலைகள் நாளாக நாளாக வளர்ந்துகொண்டே வருகின்றன. வளர்ந்து கொண்டே வருவது மட்டுமல்ல. விரிவு படுவது மட்டுமல்ல, பல்வேறு வகையிலே நுணுக்கங்களும் அதிகரித்துக் கொண்டு வருகின்றன. நுணுக்கமான முறைகளிலே ஆட்சி நடத்தவேண்டிய பெரும் பொறுப்பு எற்பட்டிருக்கின்ற காரணத்தினால், அதை நடத்துகின்றவர்கள்—ஒரு கனம் அங்கத்தினர் சொன்னது போல—அஸ்திவாரம், ஆணிவேர் என்றெல்லாம் எடுத்துச் சொன்னார்கள்—ஆணி வேர் பழுதாகாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். ஆணிவேருக்கு தண்ணீர் உற்ற மறந்து விட்டு, கிளைகளில் எலக்டிரிக் பல்பு பொருத்தி வெளிச்சம் போடுவது தவறு என்று குறிப்பிட விரும்புகிறேன். ஆணிவேர் போல இருக்கிற சர்க்கார் ஊழியர்கள் மனதில் அதிருப்தி எழாத நிலையில்—ஒரு கனம் அங்கத்தினர் சொன்னது போல: லஞ்சம் வாங்காதவர்களே கிடையாது என்று சொல்லக்கூடிய அளவுக்கு லஞ்சம் பரவியிருக்கிறது என்று ஊரிலே உள்ளவர்கள் பேசிக்கொள்ளும் கேவல பொருளாக அவர்களை ஆக்காமல், அவர்கள் உண்மையான உத்தியோகஸ்தர்களாக இருக்கிறார்கள். அடிப்படை காரியங்களை செவ்வனே நடத்துகிறார்கள் என்று மிக நீண்ட காலமாக புகழ்பெற்று இருக்கும் சென்னை சர்க்கார் ஊழியர்கள், இந்திய துணைக் கண்டத்திலே மிகத் திறம்பட பணியாற்றுகிறவர்கள் என்ற நல்ல பெயர் பெற்றிருக்கிற சர்க்கார் ஊழியர்கள், அரசியல் புயல் எத்தனை எற்பட்டாலும், அதிலே தங்களை உட்படுத்திக்கொள்ளாத சர்க்கார் ஊழியர்கள், எத்தனை மாறுதல் எற்பட்டாலும் மாறுதலுக்குத் தக்கபடி தங்களுடைய மனதிலே பக்குவத்தை எற்படுத்திக்கொள்ளும் திறமை படைத்த சர்க்கார் ஊழியர்கள், இவர்களின் ஊதியத்தை உயர்த்துவது அறநெறி நின்று பணியாற்ற வேண்டியது அமைச்சருடைய காரியம். வெறும் புள்ளி விவரங்களை கொடுத்து தப்பித்துக்கொள்ளக் கூடிய நிதி அமைச்சருடைய காரியம் மட்டுமாக இருத்தல் ஆகாது. அறநெறி நின்று, உள்ளத்திலே உள்ளதை வெளிப்படையாகப் பேசி, இதிலே இருக்கிற சிக்கல்களை ஆராய்ந்து பார்ப்பதற்கு ஒரு தனி கமிட்டி எற்படுத்துவது தான் நியாயமானது, தேவையானது, அவசரமானது, கட்சிகளுக்குப் அப்பாற்பட்டது என்பதனை இந்த மன்றத்திலே வலியுறுத்திக்கூறி, என்னுடைய உரையை முடிக்கிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR : கனம் சபா நாயகர் அவர்களே கனம் அங்கத்தினர் பேசிய போது நான் பேசியதை பற்றி குறிப்பிட்டார். " ஸ்பிரிட்டை " விட்டு " பாடியை " எடுத்துக்கொண்டது போல பேசியிருக்கிறார்கள். நான் 20 ஆண்டு காலம் கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர்கள் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கவேண்டுமென்று சொல்லவில்லை. இந்த சர்க்கார் செய்திருக்கிறது, இன்னும் செய்கின்றது, என்ன செய்தாலும் நம்முடைய நாட்டினுடைய நிலைமை, ஊழியர்களுக்கு 20, 30 ஆண்டுகளுக்கு பூரண திருப்தி எற்படாது என்று சொன்னேனே தவிர, வேறு ஒன்றுமில்லை. ரூ. 200, 300 சம்பளம் வாங்கும் என்.ஜி.ஓக்கள் இருக்கிறார்கள் என்பதையும் அறிவேன்.

### III.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER—*cont.*

### BILLS PASSED BY THE COUNCIL

MR. SPEAKER : Before I call upon the Leader of the Opposition to speak, I have to announce that the Madras Legislative Council has passed on the 30th September 1958 the Madras District Boards (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 36 of 1958) without any amendment and the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 16 of 1958) without any recommendation.

இருக்கலாம். அவர்கள் அழைத்திருக்கிறார்கள். தேதி நிச்சயமாகவில்லை. இந்த மாதக் கடைசியில் இருக்கும் ; அல்லது நவம்பர் முதல் வாரத்தில் இருக்கும் என்று நினைக்கிறேன்.

ஆகையால், அவர்கள் கூடிய சீக்கிரத்திலே எல்லாவற்றையும் பரிசீலனை செய்து அவர்களுடைய அறிக்கையைச் சமர்ப்பிக்கப் போகிறார்கள். அதற்காகத்தான் அவசரமாக இந்த மாதக் கடைசிக்குள்ளாகவே இருந்தால் சௌகரியம் என்று வலியுறுத்தி எழுதியிருக்கிறார்கள். ஆகையால், இன்றைக்கு இதில் இருக்கும் பிரச்னையைத் தெரிந்துகொள்ளாத முறையில் எங்களுக்கும் கடும் மனம் இருப்பதுபோலவும், இங்கு எதிரிலே இருக்கிறவர்களுக்கு மட்டும் உருகும் மனம் இருப்பது போலவும் பேசி, இந்தப் பிரச்னை தீர்க்கப்படாமல் இருக்கிறது என்று யாராவது நினைத்தால், வேண்டுமானால் அரசியல் காரணத்திற்காக, அரசியல் பிரசாரத்திற்காகப் பேசலாமே தவிர, அது உண்மையாக இருக்க முடியாது என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். இதனுடைய நகல் ஒன்று இங்கு மேஜை மேல் வைக்கப்பட்டிருந்ததை எல்லோரும் பார்த்திருக்கிறோம். ஆனால், கனம் அங்கத்தினர் திரு. அண்ணாதுரை அவர்கள் மட்டும் கவனிக்கவில்லை போலும். அரசாங்க ஊழியர்களிடத்திலே இவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்ளுகிறவர்கள் அவர்களுடைய ஊதியத்தைப்பற்றிய இவ்வளவு முக்கியமான தஸ்தாவேஜி மேஜைமேல் வைக்கப்பட்டபோது, அதைக் கவனிக்காமல் இருந்திருக்கிறார்களே என்பதுதான் எனக்குக் கொஞ்சம் கவலையாக இருக்கிறது.

SRI P. U. SHANMUGAM : Sir, when was this statement placed on the table of the House?

SRI M. KALYANASUNDARAM : It was placed on the table of the House on the 18th March 1958.

THE HON. SRI C. SUBRAMANIAM : திராவிட முன்னேற்ற கழகத்தவர்களும் அரசாங்க ஊழியர்கள் பேரில் கொஞ்சம் அக்கரை எடுத்துக் கொள்கிறார்கள் என்பது இதிலிருந்து நன்றாக விளங்குகிறது.

MR. SPEAKER : It is now 5 o'clock. According to the rules ordinarily the House will have to rise now. The Hon. Minister has got to finish his reply. The Mover of the resolution has got the right of reply. The Hon. Minister has got the right of a further reply. May I therefore suggest that we continue the discussion on the next non-official day?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

MR. SPEAKER : The House will now adjourn and meet again at 11 a.m. on Wednesday, the 29th October 1958.

The House then adjourned.

## VII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*B. Reports and other papers.*

54. *The Madras District Boards (Amendment) Bill*, 1958 (*L.A. Bill No.* 36 *of* 1958).

## Appendix I.

[Vide answer to short notice question No. 32 asked by Sri T. Sampath (on behalf of Sri R. Srinivasa Iyer) at the meeting of the Legislative Assembly held on 30th September 1958, page 1019 supra.]

*Copy of the Executive instructions issued by the Government.*

It has been represented to the Government that since 1st January 1957 some of the dealers have not collected the additional tax in respect of the sales of mill cloth, etc., made by them. The Government have decided that in cases where the dealers prove to the satisfaction of the assessing authorities that they have not collected the additional tax from their customers, the collection of the additional tax should be waived in respect of their sales of mill cloth, etc., during the period from 1st January to 17th December 1957. The onus of proving that he has not collected the additional tax from his customers will be that of the dealer. The Government have further decided that in cases in which the dealers had not collected the additional tax from their customers for their sales during the period from 1st January to 17th December 1957, but had paid tax to the Department, refunds should be allowed on application by each dealer, after a careful scrutiny of each case. The Board of Revenue is requested to issue instructions to its subordinate officers on the above lines and to send a copy of the same to the Government ofr information.

## APPENDIX II.

[Vide answer to starred question No. 634 asked by Sri M. C. Muthukumaraswamy at the meeting of the Legislative Assembly held on 30th September 1958, page 1023 supra ]

*Particulars showing the number of Primary Health Centres opened and the amount provided for each Primary Health Centre talukwar in Tanjore district during 1957–58.*

### I. PRIMARY HEALTH CENTRES OPENED IN NATIONAL EXTENSION SERVICE BLOCK.

| | *Name of taluk.* | *Name of block.* | *Name of Primary Health Centre.* | *Date of opening.* | *Amount provided for 1957–58.* | |
|---|---|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) | (5) | |
| | | | | | RS. | NP. |
| 1 | Nannilam .. .. .. | Kodaivasal .. .. .. | Tiruvizhimazhalai .. .. | 5th December 1957 .. | 23,320 | 00 |
| 2 | Tiruthuraipoondi .. .. | Muthupet .. .. .. .. | Sengandhi Idaiyur .. .. | 10th March 1958 .. | 23,320 | 00 |

### II. PRIMARY HEALTH CENTRES OPENED IN COMMUNITY DEVELOPMENT BLOCKS.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1 | Tiruthuraipoondi .. .. | Tiruthuraipoondi .. .. .. | The Local Fund Dispensary, Vedaranyam was converted into a Primary Health Centre. | 13th June 1957 .. | 16,728 | 7[illegible] |
| 2 | Sirkali .. .. .. | Sirkali .. .. .. .. .. | Thiruvengadu .. .. | 16th September 1957. | 20,700 | 00 |
| 3 | Do. .. .. .. | Anaikaranchattaram .. .. | Nallur .. .. .. .. .. | Do. | 15,108 | 00 |

[30th September 1958

## APPENDIX III.

[Vide answer to starred question No. 639 asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 30th September 1958, page 1027 supra.]

[SUBJECT.—*Orphanages—Statement showing the number of orphanages for young orphan girls run by government and private agencies, etc.*]

(*a*) The following are the Homes in the Madras State for the protection of young orphan women :—

Institutions run by Government—

(1) Service Home, Tambaram.

(2) Girls Certified Schools, Madras.

(3) Reception Home for Girls, Egmore, Madras.

(4) Stri Sadana, Madras.

(5) Vigilance Shelter, Madurai.

(6) Do. Tiruchirappalli.

(7) Do. Salem.

(8) Do. Coimbatore.

Institutions run by private agencies—

(1) Trichy Seva Sangam, No. 2, Williams Road, Cantonment, Tiruchirappalli.

(2) Avvai Ashram, Sivasailam, Tirunelveli district.

(3) Service Home, Gandhigram, Madurai district.

(4) Madurai Sevikashram, Madurai district.

(5) Service Home, Kamala Nehru Nilayam, Kozhikalnatham, Salem district.

(6) Junior Certified School under the Madras Society for the Protection of Children, Madras.

(7) Junior Certified School under the Seva Samajam Girls' Home, Madras.

(8) Junior Certified School under the Bala Mandir, Madras.

(9) Junior Certified School under the Kasturba Basic School, Keelamoongiladi, South Arcot district.

(10) Junior Certified School, under Gandhi Vidyalayam, Tiruchitrambalam, Tanjore.

(11) Junior Certified School under Gandhigram, Madurai.

(12) Junior Certified School under Balamandiram, Madurai.

(13) Reception Home under the Children's Aid Society, Madurai.

(14) Reception Home under the Children's Aid Society, Vellore.

30th September 1958]

(15) Reception Home under the Discharged Prisoners' Aid Society, Salem.

(16) Reception Home under the President, Juvenile Court, Tiruchirappalli.

(17) Reception Home under the Discharged Prisoners' Aid Society, Coimbatore.

(18) Meenakshi Sadanam, Madurai.

(19) Abhaya Nilayam, Madras.

(*b*)—

| | |
|---|---|
| Service Home, Tambaram .. .. .. | 150 |
| Service Home, Gandhigram .. .. .. | 93 |
| Trichy Seva Sangam, Tiruchirappalli .. | 50 |
| Avvai Ashram, Tirunelveli .. .. .. | 20 |
| Madurai Sevashram, Madurai .. .. | 15 |
| Kamala Nehru Nilayam, Salem .. .. | 12 |
| Certified Schools for Girls .. .. .. | 503 |
| Reception Homes for Girls .. .. .. | 21 |
| Vigilance Institutions .. .. .. | 350 |

(*c*)—

| | |
|---|---|
| Vigilance Institutions .. | 7 in 1957. |
| Certified Schools .. .. | 8 in 1957. |
| Other institutions .. .. | 22 so far. |

(*d*) Rs. 1,01,400 in respect of the institutions under the control of the Department of Women's Welfare and Rs. 17,75,000 for other institutions.



## APPENDIX IV.

[Vide answer to clause (*b*) of starred question No. 640 asked by Sri K. Sattanatha Karayalar at the meeting of the Legislative Assembly held on 30th September 1958, page 1028 supra.]

*Occupational therapy is practised in the Government Mental Hospital, Madras, and in the Government Tuberculosis Sanatorium, Tambaram.*

### NATURE OF TREATMENT.

(1) *Government Mental Hospital, Madras*.—The mental patient tends to sit quiet and brood if he is left alone. The patient with anxiety and depressive feelings bemoans his fate, thus making worse his mental state. If he is encouraged to do some work his attention is diverted to subjects in front of him to various kinds

[30th September 1958

of appliances, tools, etc. and to the conversation and encouraging words of the Instructor. He sees his friends working and gets into a team spirit and start working. After sometime, the sight of the finished products gives him satisfaction that after all he is able to turn out useful work. He is constantly encouraged and reminded about his ability to be a useful individual. Thus his anxiety and depression are allayed and relieved.

Patients are selected to various occupational therapy sections according to their previous experience, physical ability and aptitude to the particular type of work. The following occupational therapy sections are functioning in the Mental Hospital, Madras :—

1 Carpentry.
2 Blacksmithy.
3 Book-binding.
4 Masonry.
5 Gardening.
6 Spinning.
7 Weaving.
8 Tailoring.
9 Dhoby khana.
10 Poultry farming.
11 Cora mat-weaving.
12 Palmyrah mat-making.
13 Assisting kitchen work.
14 Paper cutting and flower-making.
15 Embroidery and needle work.

(2) *Government Tuberculosis Sanatorium, Tambaram*—(i) Usually patients in the Sanatorium remain there for a long time. In order to improve t eir morale, keep them in good spirits and divert their mind from the dreadfulness of the disease and consequent mental worries they are encouraged to engage themselves in some occupation under the supervision of a social worker. This helps in curing the disease faster.

The following occupational therapy sections are functioning in the Government Tuberculosis Sanatorium, Tambaram :—

1 Knitting.
2 Spinning.
3 Embroidery.

(ii) There is an After-care and Rehabilitation centre at Amrit Nagar, Tambaram, attached to the Government Tuberculosis Sanatorium for ex-Tuberculosis patients who are not completely cured of the disease but do not receive Sanatorium treatment. They are engaged in light work like printing, composing, book-binding, rattan work, etc. Incidentally they learn a new trade not involving much hard labour in which they can profitably engage themselves after their final discharge from the colony.

30th September 1958]

## APPENDIX V.

[Vide answer to starred question No. 647 asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 30th September 1958, page 1032 supra.]

*Districtwise allotment under Agricultural subsidy during* 1958–59.

| Serial number and name of the district. (1) | Amount sanctioned in 1958–59. (2) |
|---|---|
| | RS. |
| 1 Chingleput .. .. .. .. | 1,14,000 |
| 2 North Arcot .. .. .. .. | 1,14,000 |
| 3 Tanjore .. .. .. .. | 1,35,945 |
| 4 Salem .. .. .. .. .. | 1,35,945 |
| 5 Coimbatore .. .. .. .. | 1,41,625 |
| 6 Ramanathapuram .. .. .. | 1,19,985 |
| 7 Kanyakumari .. .. .. .. | 28,500 |
| 8 South Arcot .. .. .. .. | 1,49,055 |
| 9 Madurai .. .. .. .. .. | 1,25,400 |
| 10 Tiruchirappalli .. .. .. .. | 1,04,595 |
| 11 Tirunelveli .. .. .. .. | 1,20,840 |
| | 12,89,890 |
| | or |
| | 12·90 lakhs. |

## APPENDIX VI.

[Vide answer to starred question No. 659 asked by Sri M. Jagannathan at the meeting of the Legislative Assembly held on 30th September 1958, page 1040 supra.]

### Recommendations of the Bombay Scavengers Living Conditions Enquiry Committee.

*Recommendations.*

(1) It may be noted with interest that latrines with receptacles which are generally removed by scavengers came into vogue only after the establishment of Municipalities during the British regime.

(2) The caste of Bhangi as such was confined only to certain Provinces like Gujarat, Maharashtra, Karnatak, etc. It is of a very late origin ancestors of these Bhangis were just field labourers of a low caste but never did the work of scavenging. Some of these people took to the dirty work of cleansing the latrines for the sake of profit. Slowly this developed into a monopoly. The stage was reached when the Bhangis wanted to exploit this monopoly and a sort of customary right was thus developed. By force of habit the Bhangi lost his self-respect to such an extent that he did not consider the dirty work of cleansing latrines as a curse from which he should endeavour to extricate himself.

*Remarks—Views of this Government.*

(1) & (2) This Government have no remarks to offer in the matter.

(3) The Committee are strongly of the opinion that the Gharaki system or the system of customary right of scavenging should be abolished both in the interest of the Bhangis and also in the interests of public sanitation. The latter reason has arisen because Bhangis who had customary rights had the upper hand over the residents of towns and villages because they would do the cleansing work only as and when they pleased and at the same time they would not allow other scavengers to enter into their sphere of work to carry on the work in case of strikes, etc. This led to a high degree of insanitation in many cases.

(4) The Committee felt that suitable measures should be taken to awaken the sanitary conscience and civic sense of the public in the matter of abolition of the process of removal of night-soil by hand by the Bhangis, and to raise culture of the Bhangis caste and made them fit to take their due share in the public life of the society.

(5) The Committee has pointed out that in certain Muni-cipal Acts there is provision to regulate the construction, naintenance and control of water-closets, privies, latrines, etc., but there is no provision for the scavenging of public atrines. This has prevented the Municipalities from break-ng the so-called customary rights of Bhangis and from mproving the methods of scavenging in order to avoid the and-removal.

(6) Certain Municipal Acts, for instance in Punjab and elhi, actually include provision for the preservation of the istomary rights of scavenging private latrines. These pro-ions should be abrogated. (In this connexion attention

(3) There is no customary right of scavenging prevailing in this State.

(4) The Local Authorities should take necessary action to awaken the civic sense of the public in the matter of aboli-tion of the process of removal of night-soil by hand by the scavengers. Scavenging in this State is done mostly by Harijans. The State Government are already taking measures for the uplift of the Harijans in the educational, social and economic fields.

(5) There is provision under section 145 of the Madras District Municipalities Act for the proper maintenance and cleansing of public latrines.

(6) There is no such provision in the Acts relating to local bodies in this State.

| *Recommendations.* | *Remarks—Views of this Government.* |
| --- | --- |
| uay be invited to our proposed legislation to amend the Punjab unicipal Act in order to do away with customary right in e Delhi City.) | |
| (7) The living conditons of scavengers are very poor. Prosion of housing to Bhangis or payment of house rent to ich workers who are not provided with free quarters does ot find a place in all Municipal Acts. Wherever such proision has not been made the Act should be amended suitably. | (7) & (12) Even though there is no provision in the Madras District Municipalities and the Madras Local Boards Acts to provide quarters or payment of house rent allowance to sanitary workers, the Government have permitted by executive instructions, the Municipal Councils to grant house rent allowance to their sanitary workers who have not been provided with quarters. It will be open to Municipal Councils to provide the sanitary workers with a hut or hutment either free or on nominal rent. As a matter of fact, some of the local authorities have provided quarters for these sanitary workers. House rent allowance is being paid in most of the cases to those for whom quarters have not been provided. |
| • • • • • | |
| (12) House rent should be paid to all scavengers who have neither a house of their own or who have not been provided free accommodation by local bodies. | |
| (8) Provision of water for drinking or washing in the case of scavengers is very inadequate. Even where storage tanks and water taps are provided it has been found that the water-supply is non-existent after certain hours with the result that the scavengers are put to a lot of suffering. | (8), (9) & (11) Necessary arrangements are being made wherever possible in the matter. |
| (9) The area where scavengers reside do not have any latrines. These have to be provided. | |
| • • • • • | |

(11) There should also be provision for adequate lighting streets and open spaces, for a playground, for a congrega-nal centre, for a reading room, etc. The local bodies should asked to pay due attention to such things in the case of vengers also. Unless these amenities are provided slum arance cannot really be a success.

(10) The quarters and localities for scavengers are often uated in unhealthy places in the vicinity of open drain or mp grounds. This should be remedied. In view of the t that the breaking of monopoly or customary right of vengers will take some time, the question of housing commodation should be tackled immediately by local bodies.

(10) The Government are giving loans to Municipal Councils and Panchayats for the purpose of providing quarters to the sanitary workers employed under them. Many local bodies have availed of the grants and have constructed quarters for their sanitary workers. Hitherto, there has been no complaint that these quarters are situated in unhealthy or insanitary places. In the Second Five-Year Plan, it is proposed to provide Rs. 40 lakhs for the purpose of grant of loans to the local bodies for construction of quarters for their sanitary workers. This scheme will be sanctioned even during the first year of the Plan, if the Government of India's assistance in the form of loan is forthcoming.

(13) The dirtiest feature of scavenging work is the process hand-removal of night-soil which drops down in a chamber ow, where usually a basket or some other receptacle such a pan, a bucket, etc., is placed. The Committee have ommended that such receptacles latrines should be elimi-ed forthwith and substituted by a type of latrines which l not involve hand-removal.

(13) It is very difficult to give effect to this suggestion in crowded towns until underground drainage system is introduced. No action is possible now in this regard.

(14) Local bodies whenever they have occasion to con-ict new latrines should definitely avoid constructing the al pan latrines and should construct septic tanks or other able substitutes. Local bodies should also refuse mission to new house-owners to construct such receptacle ines.

(14) The system of construction of septic tank latrines or other suitable substitutes is even now being followed, where-ever possible in this State.

| *Recommendations.* | *Remarks—Views of this Government* |
| --- | --- |
| (15) The Committee have also made recommendations as the various types of latrines that can be brought into use order to avoid this hand-removal. They have stated that practice of carrying the night-soil baskets and drums on head from the latrines to the night-soil cart or lorry should prohibited. The cart or the lorry should pass along the ad as the work of cleansing latrines proceeds and should ep pace with it. A wheel-barrow to which a drum of suit-le size to carry night-soil with cover should be fixed and e same should be pushed by hand up to the night-soil cart lorry; otherwise the night-soil may be carried in buckets th cover. In the case of cess-pools, a suction pump fitted a lorry should be utilised. If this is not possible the wheel-rrows with a drum or any other device may be adopted. | (15) The system of removal of night-soil in buckets and in wheel-barrow drum carts and lorries is already in vogue in most of the towns in this State. The emptying of cess-pools by suction pump is also being done in a number of towns. |
| (16) It may be interesting to note that the Committee ve suggested that the night-soil should be used for the pro-ction of gas for street lighting, for fuel, etc. There are s plants already manufactured in the country which can be ed for this purpose. Public latrines should be so constructed at the night-soil, etc., should enter special tanks built for e plant from which gas will be produced and after the s has been yielded the remaining stuff is thrown out at the her end of the tank and would still retain its manurial value. he Committee have recommended that the potentialities of ch gas plants for use in village panchayats should be amined. (In this connexion it may be recalled that r. Thirin Narayanan of the Malaria Institute of India has ready evolved a gas plant for the production of gas from cow-ng and other refuse.) | (16) The gas plants referred to are not economical either for private use or for local bodies. No action is therefore proposed to be taken on this recommendation. |

| | |
|---|---|
| (17) The Committee have also recommended that five hours of scavenging work should be the maximum for each scavenger. The practice of giving off-days should also be adopted. | (17) The working hours for the sanitary workers are even now being regulated according to the suggestion of the Committee. |
| (18) Local bodies should provide suitable uniforms or cloth-ng to the scavengers in their employ. | (18) The Government have already commended to the local bodies even as early as 1940, the suggestion regarding the supply of clothing and footwear to their sanitary workers. Many local bodies are implementing this suggestion. |
| (19) A campaign must be planned by the Public Health uthorities of States, with the co-operation of local bodies and ocial workers for the purpose of securing improvements in be living condition of the scavengers and generally for the plift of scavengers as members of society. | (19) Effective steps for doing propaganda for removal of untouchability among Harijans and further ameliorative measures for the uplift of Harijans, are already being taken in this State. No fresh action is therefore called for in this State in regard to this recommendation. |
| (20) The Committee have made recommendations in egard to the minimum wages which should be prescribed or scavengers. They have proposed a scale of Rs. 25—½—30 n the case of district municipalities with a selection grade of 5 per cent with a further time-scale of Rs. 5 spread over 0 years and in the case of Notified Area Committees and ram Panchayats a flat rate of Rs. 20 per month. The same cale of allowances as is allowed to Class IV employees of overnment should be given to the scavengers also. In cer-ain municipalities an allowance called an unclean work allow-nce is also given. This allowance should be treated as part f the wages of scavengers. | (20) Under the Minimum Wages Act, this Government have fixed Rs. 25 inclusive of allowances as the minimum rate of wage for Sanitary workers employed under local bodies. But in practice, municipal councils are paying to these wor-kers a salary ranging Rs. 25 to 38 including dearness allow-ance and excluding house rent allowance of Rs. 3 per mensem. These workers are at present treated as contingent establish-ment and are paid according to the prevailing market rates. It is proposed to take up early, the general question of revising the minimum wages of workers employed under local bodies. |
| (21) If as a result of improvement in the conditions of ork of the scavengers as mentioned above, some of them re thrown out of employment, it should be the duty of the ocal bodies to see that such persons are absorbed in other uitable kind of employment under their control. | (21) This recommendation has been commended to the local bodies in this State for adoption if possible. |

